

# மணிவண்ணன் கவிதைகள்

நவபாரதி
பிரசுரம்

# மணிவண்ணன் கவிதைகள்

மணமக்கள் நீடு வாழ்க!
மணமகன் :- திரு. என். ராஜகோபாலன்
மணமகள் :- சௌ. ராமப்ரியா.
மணநாள் 27-8-71
அன்புடன்,
27-8-71

## மணிவண்ணன்


நவபாரதி பிரசுரம்

புத்தக வெளியீட்டாளர்கள்.

23/442 சுக்கிரவாரப்பேட்டை, கோயம்புத்தூர்-1.

# முன்னுரை

நவபாரதி பிரசுரத்தின் மூன்றாவது வெளியீடு இது. நான் பல்வேறு சமயங்களில் எழுதிய கவிதைகள் ஒரு தொகுதியாக இப்போது இதில் வெளிவருகின்றன. என்னுடைய கவிதைகள் ஒரு தொகுப்பாக வெளிவர வேண்டும் என்று அவ்வப்போது ஏராளமான அன்பர்கள் எனக்குக் கடிதங்கள் மூலம் வேண்டியிருக்கிறார்கள். சிறுகதைகள், நாவல்கள், இலக்கியக் கட்டுரைகள் எல்லாம் எழுதுவதற்கு முன் நான் முதல் முதலாக எழுதியவை கவிதைகளே ஆகும். கவிதைகளை மட்டுமே எழுதிக்கொண்டிருந்த காலத்தில் நான் உணர்ந்த தாகமும், தவிப்பும், தாபமும் விநோதமானவை. புதுமையானவை. மறுபடி அடைய முடியாதவை. ஆனால் அடைய ஆசைப்படுபவை.

என்னுடைய நாவல்கள், கதைகள் போன்ற இலக்கிய வடிவங்களிலும் கவிதைச் சாயல் கொண்ட பகுதிகளும், கவிதைகளேயான பகுதிகளும் நிறைய உண்டு. 'நவநீத கவி' என்ற பெயரில் எனது பொன்விலங்கு நாவலில் வரும் ஒரு கற்பனைக் கவிஞரும் அவருடைய கவிதைகளும் பிரபலமாகியிருக்கின்றன. பொன்விலங்கு நாவலைப் படித்த படிக்கின்ற யாருக்கும் 'நவநீதகவி என்பவர் யார்?' என்று கேட்கத் தோன்றுவது நிச்சயம். கடித மூலமாகவும் நேரிலும் பலர் என்னிடமே அப்படிக் கேட்டும் இருக்கிறார்கள். அந்த நவநீதகவியின் கவிதைகளைத்தான் நீங்கள் இந்தத் தொகுதி முழுவதும் பார்க்கிறீர்கள்.

என்னுடைய கவிதைகளில் மன உணர்வுகளைப் போலவே சொல்லின் நயங்களையும் நான் விரும்பிக் காதலித்திருக்கிறேன். சொற்களை நான் வணங்கும் நிலைகள் உண்டு. அப்போது அவை மந்திரமாகி விடுகின்றன. சொற்களை நான் வழிபடும் நிலைகள் உண்டு. அப்போது அவை தேவ சக்தி நிறைந்தவைகளாகிவிடுகின்றன. சொற்களை நான் நேசிக்கும் நிலைகள் உண்டு. அப்போது அவை என் சிநேகிதிகளாகி விடுகின்றன. சொற்களை நான் காதலிக்கும் நிலைகள் உண்டு. அப்போது அவை என் பிரியத்துக்குரிய வாலைப் பருவத்துக் கன்னிகைகள் ஆகிவிடுகின்றன. சொற்களுக்கும் ஒரு கவிஞனுக்கும் இத்தனை விதமான தொடர்புகள் இருக்க முடியுமா என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் இருப்பதென்னவோ உண்மை. கலைகவல்லான், நவபாரதி.

# தேடித்தவித்த திரு

நெஞ்ச குறைதுறக்கப்—பல
நீண்ட புனைக்கதைகள்
விஞ்சைக்கனவுகள் வேதனைகள்

எத்தனையெத்தனை கற்பனைகள்
இங்குநான் கண்டிருந்தேன்—முடிவில்
அத்தனை நினைவும் போகும்
அத்தனைவடிவும் போகும்

சித்தக் கனவுகள் செய்கைமறதி
பேரும் அனைத்தும்
மொத்தம் போகும்
பீதியனைத்தும் பொய்யாகும்
இத்தனை நாளும் தேடியகற்பனை
இவளெனக் கண்டுகொண்டேன்.

—கண்டபின்னால்

இடைவிட்டு நெகிழ்ந்த
பட்டுச் செவ்விதழ்
பட்டுப் புலர்ந்திடவே

நடைகெட்டுத் தளர்ந்து—நின்
கனிவச் சிறடி
நலிந்து கிடந்திடவே
படைகோட்டும் வேல்விழி
பலபேச்சுப் பேசிடவே
பாதிதிறந்த மாதுளைமுத்தெனத்
தடைதட்டும் சிறுபுன்னகை
தறிகெட்டுக் கிறங்கிவர—நீ
தயங்கித் துவண்டதுதான்
முன்னைத் தினங்களில்—சில
மோகக் குறும்புகள்
முனைந்து முனைந்தாடிக்
கன்னங் கனிந்ததுவும்—என்
கன்னங் கலந்ததுவும்
கைகட்டித் தழுவியதும்
பின்னைத் தினங்களில்—நீ
பயில திருந்தாநல்
பிறழ்ந்து தளர்ந்தனையோ?

என்ன துயரந்தான்—உனை
அலைத்து வருத்தியதோ?
அல்லல் புகுத்தியதோ?
மண்ணை மிதித்தறிவோம்
மண்ணில் நடந்தறிவோம்
மண்ணில் நடந்ததன்று

கண்ணினைக் கண்கள்கவ்வப்—பல
காதல்கள் செய்ததுண்டு
காசினி முற்றிலும்
எண்ணிவியந்து பேசிமகிழ்ந்திட—நாம்
இன்பவுலகினை யாண்டிருந்தோம்
இந்தஉலகினை மறந்திருந்தோம்
மண்ணில் பிறந்துவிட்டோம்—இனி
மனிதரில் கலந்துவிட்டோம்
மனங்களில் உயர்ந்துவிட்டோம்

எண்ணற்ற வேதனைகள்—பல
இடையூறு தடைகோள்கள்
எத்தனையோ இருந்தாலும்
நண்ணுற்ற பிறவியெலாம்—இங்கு
நாமிருவர் பிரிந்ததில்லை
நாமிருவர் பிரிவதற்குக்
கண்ணற்ற குருடர்கள்போல்—சிறு
கலகச்சூதுகள் புரிந்திடுவோர்
கண்ணெதிரே பலருண்டு.

—இருந்தாலும் 

நம்முள் பிரிவுசிறிதில்லை—இது
நானிலமொப்பிடும் பெருண்மை—நீ
களித்துக் களித்துச்
சிரித்ததுவும் கனவுகள்பற்பல
கண்டது கண்டனவும்

ஒளித்து ஒளித்து—விழி
ஓரம் சொருகிடப்
பார்த்தது பார்த்ததுவும்
தேடித்தவித்த திருவானாய்—நான்
தேடிக்குவித்த திருவானாய்!

ஓடிஒளிந்து—சில விளை
யாடல்கள் ஆடிமகிழ்ந்ததுவும்
மாடிநிலவினைச் சிரிப்பில்
மகிழ்ந்து பகிர்ந்ததுவும்
திருட்டுப் புரிபவர்போல்
திமிறித்திமிறித் தழுவியதும்
திடுமெனக்கைகள் இணைந்ததுவும்
இருட்டு நினைவுகள்போல்
இன்றோடுபோயின போயினவோ?
குருட்டுச் சிறுமைகள்பேசிடுவோர்
கூடியிருந்து சிரித்தாலும்
மருண்டு பயந்திடநாம்—வெறும்
மானிடச் சாதியில்லை
தேவர்கள் நாமிருவர்—இங்கு
தெய்விகம்செய்திடல் நம்தொழில்.

# ஞாபக மலர்கள்

ஆயிரம் அலைகள்
    பாயிரம் பாடிட—அலை
ஓல மிடுங்கடல்
    ஏழும் துணையாக—நம்
காலம் வகுத்தபல்
    காரியக் கூத்தினுள்ளே
கனவும் நனவும்—கூடிக்
    கலந்தநல் வேளையிலே—ஒரு
காவியமெழுந்தது காணடீ!

## சப்த சமுத்திரம்

எட்டுத் திசையும் புகழ்பாட
    ஏழுகடல்கள் அலையாட—இடை
விட்டுவிட்டுக் குயில்கூவ
    வீதி மரங்கள் அசைந்தாடச்—சிறு
பட்டுச் செவ்விதழ் முத்துப் புன்னகையால்
    பார்த்த பார்வை சொல்லாக—உன்
கட்டுக் குலையா மேனியுடன்—நீ
    கனவில் வந்து தழுவியதும்

விட்டுப் பிரிந்துபின் தழுவியதும்
வீதிவழியே நடக்கையிலே
பாதிக் கண்கள் பார்த்ததுவும்
பார்த்த கண்கள் பேசியதும்
கோதி முடித்த குழற்காட்டில்—உன்
கோல மதிமுகம் மலர்ந்ததுவும்
சீத முகத்திற் சிறுமுறுவல்
தெய்வ நலங்கள் காட்டியதும்

பேதை வளர்ந்து பெண்ணுகிக்
காதல் வளர்ந்து மணமாகி—நீ
மாதர் நடுவே தாயாகி—
ஏழு பருவக் கடல்கடந்து
இருந்த இடத்தே நடைதளர்ந்து
வாழும் நாளில் நினைத்தாலும்...
நினைவின் நடுவே மலராவாய்—உன்
ஞாபக மென்னுள் மணமாகும்.

நடை

சின்னத் தாமரைப் பாதங்கள்
சிவக்கச் சிவக்கநடந்து வந்தே—நீ
கன்னங் குழியச் சிரித்ததுவும்—உன்
கைகள் நீட்டித் தழுவியதும்
மின்னல் இடைநடு நெளிய
மெல்லப் பதம் பெயர்த்தே—நல்
அன்ன நடை நடந்து—நீ
அகன்று பெயர்ந்து திரும்பியதும்

மெட்டி விரல்கள் தாளமிட—நல்ல
முன்கை வளைகள் ஒலமிடப்
பட்டுச் சிறடி கோலமிட—நீ
மச்சுப் படிமேல் நடந்ததுவும்
எட்டி யிருந்து சிரித்ததுவும்—பின்
இணைந்து வந்து குலவியதும்
கட்டுக் கதையாய்ப் போயிற்றோ—பெருங்
காற்றில் வைத்த சுடராச்சோ?

**கழிவிரக்கம்**

காலச் சுவரில் ஓவியமாய்—என்றும்
கரையா நினைவிற் காவியமாய்
நீலக் கடலிற் பேரலையாய்—மனம்
நீந்தித் தீராப் பெருவெளியாய்
கோலமுகத்திற் சுழன்றுவரும்—இரு
குவளைக் கண்ணி செவ்விதழில்
சாலப் பதிந்த சிந்தனைகள்—இங்கு
தயங்கித் தயங்கி அழவைக்கும்.

மனிதர் நினைப்பவை பலிப்பதில்லை
மனத்தில் நினைப்பவை நடப்பதில்லை
கணிதம் பார்த்துக் கணக்கிட்டும்
காலம் பொறுத்துப் பிழையாச்சு
புனித நினைவுகள் பொய்யாச்சு
பூசல் செய்பவர் மெய்யாச்சு
மனிதர் வாழ்க்கை இதுகண்ணே
மண்ணில் வாழ்க்கை இதுகண்ணே!

## உலக நியாயம்

வாழப் பிறந்தவர் சாவதுவும்
சாகப் பிறந்தவர் வாழ்வதுவும்
ஈனக் கொடியவர் சிரிப்பதுவும்
இங்கிதம் தெரிந்தவர் அழுவதுவும்
மான முன்னவர் மடிவதுவும்
மானங் கெட்டவர் பெருகுவதும்
ஞானிகள் வெறுத்த மண்ணின்மேல்
ஞாய மிருப்பது தெரியவில்லை!

## அழியா நினைவு

காலிற் கொலுசு கலகலக்க—இளங்
கையில் வளைகள் சலசலக்கப்
பாலும் தேனும் போல்மொழிகள்—அவை
பலப்பல பேசி நீசிரித்துக்
காலம் மறைத்த கனவானாய்—ஒரு
காவியம் நிறைந்த நினைவானாய்
காணும் நினைவில் மலரானாய்—உன்
ஞாபக மென்னுள் மணமாகும்.

தெருவில் திரிந்து விளையாடும்
சிறுபேதைப் பருவம் முதலாகக்
கருவிற் பிறந்து வளர்ந்திருந்த
காதல் துணைவர் நாமெனவே

இருவர் நினைவும் ஒன்றாகி
இங்கும் அங்கும் சொல்லாகி
முடிவிற் பெரிய பொய்யாகி
மூண்ட விதியை என்னென்பேன்?

## அழிந்த கற்பனை

எழுபருவக் கடல் கடந்து—நீ
இருந்த பருவம் மூப்பாகிக்
காலம் தேய்த்த சந்தனமாய்க்
கனவில் மணக்கும் சண்பகமாய்
நீலம் தோய்ந்த கண்ணிரண்டும்
நினைவில் வந்து அழுதாலும்
காலம் குலைத்த கற்பனையே—நீபென்
கனவில் மலர்ந்த மலராவாய்!

# சொற்கடந்தாய்!

மண்பார்த்து வியக்கின்ற பேரழகு நாயகியாள்
எண்பார்த்து எழில்பார்த்துப் பண்பார்த்த
பண்மொழியாள்
பெண்பார்த்துப் பித்தடையும் புதியசுவைப்
புன்னகையாள்
பின்பார்த்து முன்பார்த்துப் பூதலத்தில் சரிபார்த்து
இன்றில்லை நேற்றில்லை இனியில்லை என்றுறுதி

தன்காப்பிற் படைத்தளித்த தங்கநிறச் செங்கமலம்
மென்காற்குச் சிலம்பசையத் தென்காற்றுக் குழலசைய
நன்காற்றப் பிறந்ததனிப் புண்ணியமே பெண்ணாகிப்
பெருகிவரும் காலமெனும் வெள்ளத்திற் கலப்பதற்காய்
இளகிவரும் தேன்சுவையாய் எழுந்துவரும்
பொன்னுருக்காய்

நாலுமுகக் கடவுள்தன தெட்டுவிழி கெட்டுவிழக்
காலைபகல் மாலையிருள் கற்பமெனும் மானிடவர்
காலமில்லை மறந்திருந்து தெரிந்தழுந்திச் சிறந்துவரக்
கோலமிடுங் கோகனகக் குத்துவிளக் கொத்ததனிச்
சித்திரமே புத்தழகே கஸ்தூரி மணக்கின்ற

கற்பகமே அற்புதமே
பற்பலவாம் சிற்பங்கள்
ஒத்திடவே தினந்தோறும்
கணந்தோறும் நினைந்தார
நினைப்பினிலே பிறந்திருந்து
நினைப்பினுளே உறைந்திருந்தாய்
எத்தனைபல் யுகங்களெனும்
நித்தியமாய் நின்றிருந்தாய்
இத்தனையும் சொன்னதற்குப்
பொருளில்லை; சொற்கடந்தாய்!

# செல்லல் தவிர்த்திடுவாய்!

மின்னல் வடிவெடுத்து மேகக்குழல் தொடுத்துக்—கரும்
பின்னற் சடையெடுத்துப் பெண்ணென்
றுருக்கொடுத்துப்—புதுப்
பொன்னின் நிறம்படைத்துக் கன்னங் கனிந்திருக்கக்
கன்னித் திறம்பிறந்து மின்னிச் சிறந்திருக்க—இள
மொட்டவிழும் பருவத்துக் கட்டழகு பட்டழகு—நெற்றிப்
பொட்டழகு மிக்குயர நிற்குமெழில் கற்கனியச்
சொற்கனியும் பொருள்கனியக் கவிகனியக்
கனிந்திருக்கும்—கைப்
பெட்டியுடன், மனநிற்கக் கால்நடக்கும் மதிவதனி!

நீலக் கரையிட்டலை நீளக் கடலெதிரே—தனி
நீலக் கரையிட்டலை கோலத் துகிலெழிலீ—
கண்கள் மிகநெருங்க இருகால்கள் தனிபிரியச்—சிற
பெண்கள் பெற்றமனை யிரும்போ கனகல்லோ
பூட்டுத் திறவாத பெட்டியிலே மனக்கொள்ளை
போட்டுத் திறைகொடுத்த பிள்ளை யுருவிருக்கச்
செல்லும் கால்களோடும் செல்லாக் கண்களோடும்
மெல்லத் தயங்கிவரும் செல்லக் கயல்விழியே—நீ
செல்லல் தவிர்த்திடுவாய் செல்லல் தவிர்த்திடுவாய்!

# ஏதோ ஒரு ஞாபகம்

தேமிதவும் வான வெளியினில்—என்
சிந்தை கலந்து மயங்கியதும்
சாதி மல்லிகை முகையவிழ்த்தே—ஒரு
சாகஸ மாகி பணைந்ததுவும்
கோதி முடித்த குழற்காட்டில்—ஒரு
குமரி முகமதி நகைத்ததுவும்
ஏதோ ஒரு ஞாபகமாகி—என்
இதயம் நிறைய வியாபகமாகிப்
பாதி முறிந்த முள்ளெனவே—நன்
பார்வை முறிந்து சொல்லாகி
வீதி நிறைந்த பொருளெல்லாம்—பல
வெளி வராத கவிதைகளாய்
ஆதி நிலையின் சாயல்களாய்—சொல்
அடுத்த நிலையின் மாயைகளாய்
ஏதோ ஒரு ஞாபகமாகி—என்
இதயம் நிறைந்த வியாபகமாகிப்
பூசம் கண்ட சிறுபயல்போல்—புவி
பொருந்தும் அதிசயம் அவையெல்லாம்—நான்
பாதி கண்டு மருண்டதல்லால்—இன்னும் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

சித்திரை நிலவொளிச் சிறப்பினையும்
தென்றல் குலவிடும் நயத்தினையும்
முத்திரை யுலவிடும் நடமகள்—இள
மோகவெறி நிகழ் கூத்தினையும்
சித்திர மாகி நிறைந்த—நம்
தென்கடற் குமரி வனப்பினையும்
சத்திர வாசலில் தடுமாறும்—ஒரு
தரித்திர நாயகக் குருடனையும்
அத்தி மரக்கிளை மேலிருந்தே—குரல்
அகவி மகிழும் குயிலினையும்
பொத்தல் மரக்குகை ஆந்தையையும்—இப்
பூமி நிறைய நிகழ்ந்திடும்
சத்திய மவற்றின் பிரதிநிதிபோல்—பெருந்
தாடி யசையும் ஒருசாமியையும்
எத்தனையோ பல மக்களையும்—நான்
என் கண்களிரண்டும் துணைக்கொண்டு
பத்திரமாகக் கண்ட தல்லால்—இன்னும் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

சோதி மலரும் அடிவானம்—அது
சொர்ணத் தீவின் படியோரம்
மாதர் சிரிக்கும் புன்சிரிப்பு—அது
மலர்மகள் வாழும் குடியிருப்பு
காதல் பிறக்கும் இளநெஞ்சம்—அது
காவியம் நடக்கும் மலர்மஞ்சம்
ஓத மிசைக்கும்பல பாடல்—புவி
கேட்டு நடக்கும் அறிவுரைகள்

வீதியில் கிடக்கும் யாசகர்கள்—வாய்
வீரம் பேசிடும் பேச்சாளர்
சோதனை செய்யும் தெய்வங்கள்—சிறு
சோற்றுக் கலையும் பையன்கள்
மீத மிருக்கும் துன்பங்கள்—இந்த
மேதினி பழகிய இன்பங்கள்
சாதல் பிறப்பு தரித்திரம்செல்வம்—உயர்
சாத்திரம் மதம் எல்லாம்
ஏதோ ஒரு ஞாபகமாகி—என்
இதயம் நிறைந்த வியாபகமாகி—நான்
பாதி கண்டு மருண்டதல்லால்—இன்னும் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

மோதியலையும் முகிற்காட்டில்
மூண்டு சரிந்த புன்சிரிப்பாய்ச்
சோதி மலரும் சிறுபிறையும்
சொலித்து மினுக்கும் மீன்கணமும்
தாதுகு செண்பக மணமாடும்
தண்கால் இளநடைத் தென்றலும்
வீதி பயிலும் நள்ளிரவில்
வெளிவாசல் கதவடைத்துச்
சாதி மல்லிகை கமகமக்கச்
சவ்வாது கஸ்தூரி மணமணக்கக்

காதல் பயிற்றும் இளம் பெண்ணும்
கற்பனை குயிற்றும் கவிப்பாட்டும்
வேதப் பொருள்தரும் வித்தகமும்
வீரர் போர்ப்படை மிகுதிறனும்
நாதக் கனிபிழிந்து நமக்களிக்கும்
ஸ்வரச மாகும் யாழொலியும்
பாதச் சரம்குலுங்கப் பதம்பிடிக்கும்
பரதமகள் நாகரிகப் பார்வைகளும்
மீதம் புவியுள்ள மேல்கீழும்
வேறு பலவிதமாம் விந்தைகளும்
ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
இதயம் நிறைந்த வியாபகமாகி — நான்
பாதி கண்டு மருண்டதல்லால் — இன்னும் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

வாகாகத் தரையோடும் வாகனங்கள்
வழிதேடக் கால்தேய நடப்பவர்கள்
ஆகாய விமானங்க ளவையன்றி
அதிவிரைவா யோடோடிப்
போகாத தூரமெல்லாம் போகின்ற
பூதலத்துச் சாதனைகள் பலப்பலவும்
சாகாமல் பிழைக்கின்ற மருத்துவமும்
சரித்திரத்தை நிறுத்திவைக்கும் பலவியப்பும்

ஆகாத காரியங்கள் ஆவதுவும்

அரசியலும் அறிவியலும் பொருளியலும்

வேகாத வெய்யிலிலே சுமைநிறைய

மேல்கொண்டு கைவண்டி இழுப்பதுவும்

பாகாய் உருகிப் பண்பாடு பேசுகின்ற

பலபெரியோர் சொல்லளவுத் தத்துவமும்

ஓகோ பெரிதென்று வியக்கின்ற

உலகத்தார் சாதனைகள் பற்பலவும்

மாகாதல் மண்ணின்மேல் நிகழ்கின்ற

மதிநுட்ப அதிநுட்பச் செயல்களெல்லாம்

ஏதோ ஒரு ஞாபகமாகி — என்

இதயம் நிறைய வியாபகமாகி — நான்

பாதிகண்டு மருண்டதல்லால் — இன்னும் ஒரு

பாடல் கண்டு முடிக்கவில்லை.

# காதல் சூது

பொன்னே போலொளிர் நுண்ணிடை
    பொலன்தொடி சுரிகுழல்
மின்னேர் வளைக்கரம் மிகுவிரல்
    மான்விழி தேன்மொழி
மென்னகை நன்னயம் சொன்னலம்
    இன்னவை நெகிழ்நெகிழக்
கன்னிமை கண்டது கண்டிருக்கக்
    காளையும் சாய்ந்திருப்பான்.

சாயும் விழியிரண்டு மொழிபடைக்கச்
    சரிந்த குழல்துவண்டு மணம்பரப்ப
மாயக் கனியிதழ் நகைசுரக்க
    மனத்தில் நினைவுகள் கனிபிறக்க
வாயிற் சொற்கள் கண்பேசக்
    கண்ணின் மொழியை இதழ்சிரிக்க
நேயச் சூதுகள் நிகழ்வதனை
    நெடுந்தோள் நம்பியும் ஆய்ந்திருப்பான்.

# தென்றலென வருகின்றாள்!

கயல்போலும் விழிபிறழக் கன்னியெழில் ஒளிகிளரக்
கனகமலர் கலசமிகு சுடர்விரியப்
புயல்போலும் குழலவிழப் பிறைக்கீற்று நிலவெரிக்கப்
புள்ளியிள மான்மறியு முடன்பயில
மயல்மேலும் பிறர்கொள்ள மங்கையவள் அழகுயரச்
செங்கையொரு புறம்வீசித் தெய்வமகள்
புயல்போலும் வனப்புமிகத் தென்றலென வருகின்றாள்
புதுமின்போல் இடைதளர வருகின்றாள்!

# கோல வெறி

நீல மலைமுகட்டில் — ஒரு
நீண்ட பகற்பொழுதில்
பாலின் நிறம்திரட்டிப் — புனல்
பாயும் அருவியிலே
மாலை வெயில்சரிந்து — இள
மஞ்சட் பொன்னுருகக்
கோல வெறிபடைத்தேன் — மனக்
கூத்தின் உருவெடுத்தேன்

சித்திரை நிலவினிலே — இளந்
தென்றல் குலவிவரப்
பத்தரைப் பசும்பொனின் — மிகு
பாவை மகளொருத்தி
நித்திரைக் கனவினிலே — தனி
நேர்ந்து தெரிகையிலே
எத்தனை மகிழ்ந்திருந்தேன் — நான்
ஏதோ அயர்ந்திருந்தேன்.

நெஞ்ச விளிம்பினிலே — பல

நேரந் தளும்புகிற

பஞ்சைத் துயரங்கள் — சிறு

பஞ்சிற் புகைந்தெரியக்

கொஞ்சும் களிப்பினொடு — மனக்

கூத்தின் உருவெடுப்பேன்

மிஞ்சும் மகிழ்ச்சியிலே — பெருங்

கோல வெறிபடைப்பேன்.

# கன்னிப் பருவம்

குறுகுறுக்கும் கருவிழிகள்
கொத்தி விழுங்கும்
துறுதுறுத்த கண்ணோட்டம்
தூயநற் கன்னிகை
விறுவிறுத்த பீடுநடை
விம்மியெழு மார்பகங்கள்
கறுகறுத்த பூங்குழல்
கட்டழகுத் தோள்கள்.

அஞ்சாத வாய்த்துடுக்கும்
அழகான உடல்மினுக்கும்
கொஞ்சி விளையாடுங்
குதலைச் சிறுமொழியும்
நெஞ்சில் விளைகின்ற
நீண்ட கற்பனைகளும்
வஞ்சிக் கொடியிடையும்
வாய்த்த கன்னிப்பருவம்.

வெட்டும் இமைவரிசை
    வீக்கும் சிலைப்புருவம்
சிட்டுக் குருவியெனச்
    சிறுதுள்ளல் விளையாட்டு
பட்டுப் புடைவை
    பளபளக்கும் மார்க்கச்சு
வட்டித்த வானமுதே
    வாய்த்த கன்னிப்பருவம்.

# தவிப்பு

பார்க்கத் தவித்துப் பார்த்ததுவும்
பாரா திருந்தே தவித்ததுவும்
யார்க்கும் தெரியா திணைந்ததுவும்
யாரும் அறிந்தே பிரிந்ததுவும்
பேசத் தவித்துப் பேசியதும்
பேசா திருந்தே தவித்ததுவும்
நேசம் தெரிந்து மணந்ததுவும்
நீசர் கலைக்கக் கலைந்தனவே.

# எழில்

நிலவைப் பிடித்துச் சில கறைகள்
துடைத்துக் குறு
முறுவல் பதித்த முகம்.

நினைவைப் பதித்து மன அலைகள்
நிறைத்துச் சிறுகளினம் தெளித்தவிழி

தரளம் மிடைந்து — ஒளி
தவழக் குடைந்து — இரு
பவழம் பதித்த இதழ்

முகிலைப் பிடித்துச் — சிறு
வெளிவைக் கடைந்து — இரு
செவியில் திரிந்த குழல்.

அமுதம் கடைந்து — சுவை
அளவிற் கலந்து — மதன்
நுகரப் படைத்த எழில்.

# தூங்கும் நினைவுகள்

நெஞ்ச மலரினைத் தொடுத்தோர்
நிர்மல மாலை சமைத்தாள் — அந்த
நித்திய மாலையைப் படைத்தென்
நெஞ்சினைப் பிணைத்தாள்.

(வேறு)

பூக்கள் மலர்ந்த பெருங்காட்டில்
புன்னகை பூக்கும் முகங்காட்டி — நான்
பாக்கள் புனையும் நயம்கூட்டிப்
பாதச் சிலம்பொலி பாடிவர — உன்
காதிற் குண்டலம் ஆடிவரக்
காட்டிற் பூத்த கவிப்பொருளே.

# மனக்கண்

காணக் கண்கோடி வேண்டும் — அந்தக்
கண்கள் அத்தனையும் — நீ
நாணிச் சிரிக்கின்ற நகைமுகத்தை — அதில்
இரகசியமாய் வரும் — உன்
வீணைக்குரல் தரு சொல்லிசையை
வீழும் மலர்போல் — இதழ்
டேணித் திறந்து பூப்பூவாய் — நீ
பேசும் அதிசயத்தை — நான்
காணக் கண்கோடி வேண்டும்
கண்டு முடிந்ததுமே பின்
ஈனச் சிற்றுலகில் வேறேதும்
இருந்து காணுமல் — கண்ணில்
ஆன தரிசனத்தின் அழகு குறையாதே
அத்தனை விழியும் அறவேண்டும்.

# அழகே...!

பூவின் இதழ் திரட்டிப்
பவழநிறம் குழைத்துக்
காவின் எழுதி நிறுத்திய
கற்பனைச் சித்திரமோ?

நீல முகில் பறித்து
நீளக் குழல் திரித்துக்
கோல விழி வரைந்த
குலவு முக மதியோ?

காலைக் கமல மலர்மேல் — இரு
கருவண் டிருந்து சுழல்
வாலைக் குமரிமுகம் — அதில்
வனப்பு வளம் பெருகமிகும்.

மெட்டி கொலுசு தாளமிட — நீ
மெத்தெனத் தத்தித்தத்தி
இட்டடி நடக்கையிலே — நான்
இங்கிதக் கனவுகள் கண்டிடுவேன்

காலமெனும் பெருநதியிற்
கண்டகண்ட அழகெல்லாம்
சாலப் பெருகிச் சலித்தபின்னால்
சடுதி பிறந்த பேரழகே!

பிறழும்போ தொருவனப்பு — விழி
பெருகிச் சுழலும் போது
உறழும்போ தெப்போதும்
உனதுவிழி பெருவனப்பே.

மலைகடல் நாடுகாடென
மாணப் படைத்தவை
கலையெழில் இலவெனக்
கன்னியுனைப் படைத்தானோ?

பார்க்கின்றாய் பதைக்கின்றேன்
பயில்கின்றாய் திகைக்கின்றேன்
ஆர்க்கின்றாய் அழிகின்றேன்
அழகேயுன் அதிசயமே!

# களம்

காலமெனும் பூச் செடியில்
கனவுமலர் பூத்தாச்சு
சாலமிகும் விதிக்கொடுமை
சார்ந்துவர உதிர்ந்தாச்சு.

ஞாலமெனும் வாக்குறுதி
நாளாக நாளாகப்
போலியெனும் மெய்யுணர்வு
புத்தியினில் பதிந்தாச்சு.

நல்லவை தீயவை
நடுநிலை நியாயம்
அல்லவை புண்ணியம்
அனைத்தும் அளந்தாச்சு.

வல்லவர் வெற்றியும்
வலியவர் பெற்றியும்
அல்லதில் வுலகினில்
அங்கியர் தளர்ந்தாச்சு

ஜீவமரணப் போர்க்களம் — இது
திறமை யுள்ளவர்
காலம் தருணம் பார்த்துளக்
கருத்தை நடித்திடு மோர்களம்.

# எழில் மன்றம்

மந்தமாருத நடையிற்
　　சிந்தும் நகையொடு
　　சிவந்த இதழ்கள்
இந்துமாமதி யிளங்கதிர்
　　இணைந்த விரல்கள்
சந்த மாநிற நறுமேனி
　　சுரிகருங்குழல் திருமுடி
சிந்துநகை கொஞ்சுவிழி
　　தந்தநிற வஞ்சியவள்
வந்தவழி எதுவோ
　　வாழும்உல கிதுவே,
என்றுநாளு முணரும்
　　இன்பமான தோர்நினைவில்
பொன்றும் காலம்வரை
　　புதுமை யானதோரெழில்
மன்றிலே யிவளிருப்பாள்.

# களம்

காலமெனும் பூச் செடியில்
கனவுமலர் பூத்தாச்சு
சாலமிதும் விதிக்கொடுமை
சார்ந்துவர உதிர்ந்தாச்சு.

ஞாலமெனும் வாக்குறுதி
நாளாக நாளாகப்
போலியெனும் மெய்யுணர்வு
புத்தியினில் பதிந்தாச்சு.

நல்லவை தீயவை
நடுநிலை நியாயம்
அல்லவை புண்ணியம்
அனைத்தும் அளந்தாச்சு.

வல்லவர் வெற்றியும்
வலியவர் பெற்றியும்
அல்லதிவ் வுலகினில்
அந்நியர் தளர்ந்தாச்சு

ஜீவமரணப் போர்க்களம் — இது
திறமை யுள்ளவர்
காலம் தருணம் பார்த்துளக்
கருத்தை நடித்திடு மோர்களம்.

# களம்

காலமெனும் பூச் செடியில்
　　கனவுமலர் பூத்தாச்சு
சாலமிகும் விதிக்கொடுமை
　　சார்ந்துவர உதிர்ந்தாச்சு.

ஞாலமெனும் வாக்குறுதி
　　நாளாக நாளாகப்
போலியெனும் மெய்யுணர்வு
　　புத்தியினில் பதிந்தாச்சு.

நல்லவை தீயவை
　　நடுநிலை நியாயம்
அல்லவை புண்ணியம்
　　அனைத்தும் அளந்தாச்சு.

வல்லவர் வெற்றியும்
　　வலியவர் பெற்றியும்
அல்லதிவ் வுலகினில்
　　அந்நியர் தளர்ந்தாச்சு

ஜீவமரணப் போர்க்களம் — இது
　　திறமை யுள்ளவர்
காலந்தருணம் பார்த்துளக்
　　கருத்தை நடித்திடு மோர்களம்.

# பூரணி

பொன்காட்டும் நிறம்காட்டிப்

பூக்காட்டும் விழிகாட்டிப்

பண்காட்டும் மொழிகாட்டிப்

பையவே நடைகாட்டி

மின்காட்டும் இடைகாட்டி

முகில்காட்டும் குழல்காட்டி

நன்பாட்டுப் பொருள்நயம்போல்

நகைக்கின்றாய் நகைக்கின்றாய்

பண்பாட்டுப் பெருமையெல்லாம்

பயன்காட்டி நகைக்கின்றாய்!

# நினைப்பு

எங்கோ இருந்தென்னை
அழைக்கின்றாய்
எங்கோ இருந்ததனைக்
கேட்கின்றேன்

எங்கோ இருந்தென்னை
நினைக்கின்றாய்
எங்கோ இருந்துன்னை
நினைக்கின்றேன்.

# மோகினி

காம்பிற்பூத்து மண்ணடைந்தாள்-ஒரு
கைபடாத தெய்வமலரானுள்
கண்ணுடி மேனிப்
பண்ணூரும் மணிமொழியாள்
ஆம்பல் மணக்கும்
அரவிந்த மதிமுகத்தில்
ஓங்கி நிமிர்ந்து
உலகளக்கப் பளபளக்கும்
உல்லாச மோகனச்
சல்லாபத் திருவிழியாள்
கள்ளாடு மணமலர்கள்
தள்ளாடிச் சரிந்துபுறம்
கொள்ளாத கருங்குழலாள்
வீங்கித் தணிந்த
வீணைத் தண்டொப்பத்
தாங்கிச் சரிந்தசிறு
தமனிய முழந்தாளில்
சரிகைத் துணியாடத்
தரையாடும் சீறடியாள்
ஏங்கியுருகக் கண்பார்க்கும்
இனிய பார்வை நலமுடையாள்.

# அலைபாயும்

முன்னும் பின்னும் நினைவாகி — அது
முடிவிற் பெரிய கனவாகி
நீயும் நானும் கதையாகி — நம்
கதையும் உலகிற் செலவாகிக்

காலப் படுகையதன்மேலே — முன்
கழிந்த நினைவுகள் கண்ணயர
அழிந்த நினைவுகள் கண்கலங்க — மனம்
அங்கும் இங்கும் அலைபாயும்.

# மோகினி

காம்பிற்பூத்து மண்ணடைந்தாள்-ஒரு
கைபடாத தெய்வமலராளுள்
கண்ணுடி மேனிப்
பண்ணுரும் மணிமொழியாள்
ஆம்பல் மணக்கும்
அரவிந்த மதிமுகத்தில்
ஓங்கி நிமிர்ந்து
உலகளக்கப் பளபளக்கும்
உல்லாச மோகனச்
சல்லாபத் திருவிழியாள்
கள்ளாடு மணமலர்கள்
தள்ளாடிச் சரிந்துபுறம்
கொள்ளாத கருங்குழலாள்
வீங்கித் தணிந்த
வீணைத் தண்டொப்பத்
தாங்கிச் சரிந்தசிறு
தமனிய முழந்தாளில்
சரிகைத் துணியாடத்
தரையாடும் சீறடியாள்
ஏங்கியுருகக் கண்பார்க்கும்
இனிய பார்வை நலமுடையாள்.

# அலைபாயும்

முன்னும் பின்னும் நினைவாகி — அது
முடிவிற் பெரிய கனவாகி
நீயும் நானும் கதையாகி — நம்
கதையும் உலகிற் செலவாகிக்

காலப் படுகையதன்மேலே — முன்
கழிந்த நினைவுகள் கண்ணயர
அழிந்த நினைவுகள் கண்கலங்க — மனம்
அங்கும் இங்கும் அலைபாயும்.

# மெலிவு

இதய மலர்ப்பொழிலில்
எண்ணங்கள் மலர்ந்திருக்க
எண்ண மலர்க்குவையில்
ஏடெழுதும் கவியிருக்கக்
கண்ணும் மனமும் பசித்திருக்கக்
கண்டவுலகில் பொய்யிருக்க
எண்ணும் எழுத்தும் சலித்திருக்க
ஏதோ நலிந்திருந்தேன்
என்னுள் மெலிந்திருந்தேன்
பண்ணும் பரதமும் மறந்திருந்தேன்
பாலும் தேனும் அலுத்திருந்தேன்
ஏதோ நலிந்திருந்தேன்
என்னுள் மெலிந்திருந்தேன்.

# அரவிந்தன்

சொல்லரிய பலதுறையும்
துயர்பெரிய தமிழ்நாட்டில்
மெல்லமெல்ல நலம்காண
மேலெழுந்த தமிழ்ச்செல்வன்
செல்லரித்த பழமையெல்லாம்
சீர்திருத்த முன்வந்தோன்
புல்லரித்து மனம்வாடப்
போகின்றான் போகின்றான்

# கனவு

பஞ்சு மேனி பளிங்கு நெஞ்சப் பெண்ணழகே—எனைப்
பார்க்கத் தவிக்கும் கண்ணழகி!
கொஞ்சுவேன் பலகனவில் சிலநினைவில்—நீயும்
கூடுவாய் ஊடுவாய் குலைந்தழுவாய்

விஞ்சையே என்மனத்திற் பெருவியப்பே—உலகில்
வீழும் பிறவியெலாம் என் துணையே
கொஞ்சம் பிரிந்தகன்று நாளிரண்டில்—உனைக்
கூட வருவேன் காத்திருப்பாய்!

# இதய மேடை

காலச் சுவரில் ஓவியமாய் — என்றும்
கரையா நினைவிற் காவியமாய்
நீலக் கடலிற் பேரலையாய்—மனம்
நீந்தித் தீராப் பெருவெளியாய்

கோல முகிலினில் மழைத்துளியாய்—சிறு
குத்து விளக்கினிற் சுடரொளியாய்
மாலை வெயிலினில் பொன்நிறமாய்—என்
மனமெனும் மேடையிற் சிந்தனையாய்

எல்லாக் காலமும் நீயிருப்பாய்—உலகின்
இறுதி வரையும் நீயிருப்பாய்
நல்லோர் தீயோர் நடுநிலையாளர்—இவர்
நட்புகள் வருவதும் போவதும்

இல்லா தொழிந்து போயிடினும்—என்
இதய நினைவினில் நீயிருப்பாய்
எல்லே இளங்கிளியே பைங்குயிலே—என்
இதய மேடையிற் சிந்தனையே!

# மனம்

என் சாண் உடம்பினில்
ஐம்புலக் கூடு வைத்தாய்—அந்த
ஐம்புலக் கூட்டினுள்ளே
ஆயிரம் நினைவுகள் அலைந்திட—ஓர்
ஒற்றை மனம் படைத்தாய்
ஒற்றை மனத்தினுள்ளே
கற்றைச் சபலங்களாய்ப்—பல
காரியச் சுமைகள் கனக்கவைத்தாய்

# ஆத்மாவின் ராகங்கள்

எல்லையில்லாததோர் காட்டிடை—நள்
    இருளென்றும் ஒளியென்றும்
சொல்லவொண்ணாததோர் மயக்கத்தே—இளஞ்
    சோகக்குயில் ஒன்றிசைக்கிறது—அதன்
சோகம்முழுதும் தெரியுதில்லை
    சுவடுமுழுதும் புரியுதில்லை
தொல்லைப் பழங்காலமுதலாய்—எனைத்
    தேடித்தவித்த குரல்
சொல்லைக்குழைத் தாளும்குரல்
    சோகம் முதிர்ந்து முதிர்ந்தூறிப்
பல்லாயிரமூழிகள் தொடர்ந்து
    பாடிப்பசித்த குயிலின்குரல்

# அரவிந்தன்

சொல்லரிய பலதுறையும்
　　துயர்பெரிய தமிழ்நாட்டில்
மெல்லமெல்ல நலம்காண
　　மேலெழுந்த தமிழ்ச்செல்வன்
செல்லரித்த பழமையெல்லாம்
　　சீர்திருத்த முன்வந்தோன்
புல்லரித்து மனம்வாடப்
　　போகின்ருன் போகின்ருன்

# சிங்கார நளினி

கருமேகம் சரியக்
குறுநிலவு வருவதுபோல்
கருநாகம் நெளியக்
கமலம் மலர்வதுபோல்
ஒருகாதிற் சுரிகுழல்
ஓசிந் தாடத்
தெருவோரம் நடந்துவரும்
சிங்கார நளினி.

# கழைக்கூத்தி

சீத மதிமுகமும்
　　　சீர்முத்துப் புன்னகையும்
காதுவரை நீள்
　　　கயல்விழியும்—கோதை
கழையாடக் கண்டாடும்
　　　கற்பனைகள் எல்லாம்
இழை யோடி
　　　ஏங்கிடுமென் நெஞ்சு.

# தேவதைகளும் சொற்களும்

தேவதையே இளநிலவே நின்
    சிறடி பதியப் பதியக்
காவினில் பூப்பதெல்லாம் உன்
    காலினில் பூக்குதடி
தாவித்தாவி நீ நடக்கையிலே உன்
    தளிரடி சிவந்து பதிகையினால்
பூமியில் ரோஜாப் பூப்பல
    பூத்துச் சொரிந்ததடி.



முகத்தினில் மாதுளை வந்தே
    முகிழ்த்திருக்கும்—முழுச்
சிவப்பினில் நித்திலப்பல்
    சிரித்திருக்கும்.

அகத்தினில் கவிநயம் நிறைந்தே
    அழகிருக்கும்—ஓர்
அருளினில் சொற்கள்
    அணைந்திருக்கும்.

# நெடுந்தூரப் பயணம்

பாதிதிறந்த விழி யோரம்—என்
பாதை தெரிந்து மயலாகும்
காதில் அலைந்த குழலோரம்—என்
காவிய மிருந்து வரலாகும்
பேதை பிறந்தமனை யோரம்—குயிற்
பிள்ளை பிறந்து குரல்பாடும்
சாதி மல்லிகை பூப்பூக்கும்—நறுஞ்
சண்பக வாசனை கமகமக்கும்.

சொல்லும் பொருளும் குழைத்துநான்
தொகுத்துப் படைத்திருக்கும்
செல்லக் கூட்டினிலே சிறைவந்த
சிறுகிளியே பைங்குயிலே
மெல்லக் கசிந்துருகும் விழிநீரால்
மெத்தப் பல நாட்கள்
சொல்லப் பயந்து குமைந்திருப்பாய்
சோகம் தெரியும் பொறுத்திரு.

மனிதர் பாடாக் குரலினிலே
மண்ணில் பாடிப் பயனென்ன?
மனிதர் புரியா மொழியினிலே
மண்ணிற் பேசிப் பயனென்ன
மனிதர் வருடா யாழ்நரம்பில்
மண்ணிற் பாடிப் பயனில்லை
இனிநாம் போகும் நெடுவழியில்
இதயம் வேக நடந்திடுவோம்.

# சொல் போதாது

புரளும் விழிக்கெண்டை மீனே—உன்
 புன்னகையின் இரகசியத்தை
மருளும் இளமானின் நடைநயத்தை—நான்
 மனத்திற் பிடிப்பதற்கே
பொருளிற் சிறந்ததமிழ்ச் சொல்லெல்லாம்—இங்கு
 போதாது போதாதடீ
அருளே அன்பே அபிமானமே—என்
 அதிசயமே ஆரமுதே!

# கேரள அழகி

பூவளக்கும் நெடுங்கூந்தல்
　　பொன்னளக்குந் தழல்மேனி
பாவளக்கும் கயல்விழிகள்
　　பாரளக்கும் நெடும்பார்வை
காவளத்தை மேல்வளர்க்கும்
　　கன்னியெனும் மதயானை
கேரளத்துப் பெண்பூவை
　　கானகத்துப் பெண்பாவை.

# மேனியழகு

முகிலுமிருளும் கலந்துபின்
    மூண்டுசரிந்த கருங்குழலாள்
துகிலும்பட்டும் புனைந்துபின்
    தோன்றிவந்த பெண்மயிலாள்
குயிலும்தேனும் இணைந்துபின்
    கூவிப்பதிந்த சொல்லிசையாள்
வெயிலும்ஒளியும் செம்பொனும்
    வீதமாகச்சமைத்த மேனியினள்.

# சொல் போதாது

புரளும் விழிக்கெண்டை மீனே—உன்
புன்னகையின் இரகசியத்தை
மருளும் இளமானின் நடைநயத்தை—நான்
மனத்திற் பிடிப்பதற்கே
பொருளிற் சிறந்ததமிழ்ச் சொல்லெல்லாம்—இங்கு
போதாது போதாதடீ
அருளே அன்பே அபிமானமே—என்
அதிசயமே ஆரமுதே!

# கடற்கரைத் தாழம்பூ

பூத்துப் பொலிந்திருந்தாய்—நறும்பூவே
பொன்னின் மெருகேறிப்
பொலிமின்னின் ஒளியேறிக்

கீற்றுவெடித் திருந்தாய்—மணமென்னும்
காற்றுத் தேரேறிக்
கன்னிமை கனிந்திருந்தாய்

நேற்றுமலர்ந்தது நீயறிவாய்—உப்பு
நெடுங்கடல் தானறியும்
உவர்க்கரை மணலறியும்

வேற்றுமனிதர்கள் யாரறிவார்—ஒரு
வேதனை பேசிடும்
உள்ளம் மணமானால்

சாற்றப்பிறரில்லை—போய்ச்
சாரக் கரமில்லை
சரியத் தோளில்லை

ஏற்றுச்சூடக் குழலில்லை—சொல்
எடுத்துமொழியக் கவியில்லை
இணைத்துமொழியப் பதமில்லை

போற்றமுடியாக் காதல்போல்—உயிர்
போய்வரை வேய்நெஞ்சம்
வேம்வரை போம்நினைவு

காற்றில்மடியும் பயிர்போலே—வெறும்
நாற்றக்கடலுள் சிறுமடலாய்
நானும்நீயும் உதிர்ந்திடுவோம்.

# கவிமகள்

கோல முகமதியிற் சிறுநாணக்
குங்குமப்பூச் சிவந்து
நீல விழிமலரிற் சிலகோடி
நெஞ்சினுரை யுவந்து
கால மளந்திடும் சிறுபோதிற்
காவியமனைத்தும் நீயாகி
வாலைக் குமரி யுருக்கொண்டு
வந்த கவிமகளே!

றேவும் நிலைபெரிதா
இங்கிருவர் கற்பனையைப்
பூவும் நாணுகின்ற
பொற்பதத்துக் கவிதைகளில்
பாவும் சந்தங்களாய்ப்
பாடும்நிலை தானெளிதா?

# எது எளிது?

சாவும் துயருமழியச்
சரிதம் புகழ்பேச
ஓவியக் கமலம்போல்
ஒளிவாடித் தேயாக்
காவியக் காதலரிருவர்
கதைகளில் வருவதுண்டு

நாவில் கவிவாணர்
நாளும் புகழ்கின்ற
சீவன்மிகு காதலினைச்
செய்யும் இவரிருவர்
காவல் ஊர்ப்பழி
கண்ணில்லா மண்ணகத்தார்

மேவும் சமுதாயம்
மேட்டுக் குடிநீதி
யாவும் முன்னெதிர்த்து
ஆழ்கடலில் சிறுபடகோன்

# காயும் நிலவு

நீலக் குறிஞ்சி நெடுவரை நீழலிற்
சாலப் பலசொல்லி நீத்தனர்—வேலவர்
பாயும் திரையாழிதென்றலுடன் மாலையெலாம்
காயும் நிலவுக் கனல்.

காயும் நிலவு கனலா யெரித்திருக்க,
தாயும் செவிலியுடன் நற்றுயும்—ஆயன்
குழலா லெறியும் கொலைவே லிசையும்
தழலா யுருகும் தகவு.

# தென்றலென வருகின்றாள்!

கயல்போலும் விழிபிறழக் கன்னியெழில் ஒளிகிளரக்
 கனகமலர்க் கலசமிகு சுடர்விரியப்
புயல்போலும் குழலவிழப் பிறைக்கீற்று நிலவெரிக்கப்
 புள்ளியிள மான்மறியு முடன்பயில

மயல்மேலும் பிறர்கொள்ள மங்கையவள் அழகுயரச்
 செங்கையொரு புறம்வீசித் தெய்வமகள்
புயல்போலும் வனப்புமிகத் தென்றலென வருகின்றாள்
 புதுமின்போல் இடைதளர வருகின்றாள்!

# நவராத்திரி

பட்டுத் துணிவிரித்துப் படிகள் கொளசிறுத்தித்
திட்ட முடனமைத்த சின்னக் கொலுமுன்னே
சிட்டுப் பறப்பதெனக் கட்டுச் சிறக்குமிளம்
பட்டுக் கரங்களசை பட்டுக் கிறக்கமுறக்
கற்றைக் குழல்சரிய நெற்றிச் சுடர்பெருக
முற்றிக் கணிந்தவிதழ் முத்துக்குவை சொரியச்
சுற்றிச் சுழன்றுவரும் ஒற்றைக் கொடியிடையாள்
சிற்றல் பொம்மையென நேரக் கண்டிளைத்தான்.

# எது எளிது?

சாவும் துயருமழியச்
சரிதம் புகழ்பேச
ஓவியக் கமலம்போல்
ஒளிவாடித் தேயாக்
காவியக் காதலரிருவர்
கதைகளில் வருவதுண்டு

நாவில் கவிவாணர்
நாளும் புகழ்கின்ற
சீவன்மிகு காதலினைச்
செய்யும் இவரிருவர்
காவல் ஊர்ப்பழி
கண்ணில்லா மண்ணகத்தார்

மேவும் சமுதாயம்
மேட்டுக் குடிநீதி
யாவும் முன்னெதிர்த்து
ஆழ்கடலில் சிறுபடகோன்

# அழகின் புக்ககம்!

பருவ வனப்பெலாம் பாங்குடன் திரண்டோர்
உருவாய்ச் சமைந்த உளங்கவர் நங்காய்
நின்பால் எளியனேன் வினவுவ லொன்றே
நின்கா தணிகுழையும் மூக்கணி கலனும்
நுதலணி சுட்டியும் குழலணி மலரும்
இதிலெலாஞ் சிறந்து கழுத்தினைத் தழுவிக்
கிளரொளி பரப்பிடும் வளரிள நித்தில
நளின மணிச்சுடர் நல்லொளி யிலங்கி
வார்சர மதுவும் ஆர்ப்பரித் தொலிக்கும்
சீர்வளை யவையும் செம்மலர் மேனித்
திகழ்நறுந் துகிலும் அவைதரு கடைகளில்
புகழ்பெற வொண்ணுமோ பொங்கொளி மிகுக்கும்
ஆடிப் பெட்டியில் அழகுற விளங்கினும்
நாடி விரும்பும் குழையும் சுட்டியும்
நல்மூக் குத்தியும் பல்முத் தாரமும்
சில்வளைக் கூட்டமும் செறிநூற் கலிங்கமும்
அரும்பு மலர்ந்து புதுமணம் பொங்கி
விரும்பி யணிய விழையும் மலர்களும்
தாம்விலை போகும் கடைகளிற் றங்கி
ஏமுற வில்லாப் பொருளாய் இணைந்து

உன்னிட மணைதலா லொருதனி வனப்பினை
நின்னிடம் பெறுவ தேனென் றுரைப்பாய்
மீண்டு மதர்த்துக் காண்டகு விருப்பில்
வேண்டி நோக்கும் விழியுடைக் கிளியே
அழகை யடைதலா லழகுமோ ரழகினைப்
பழகிப் பெறுமெனும் பான்மையோ வுரைப்பாய்
அன்ன பொருளெலாம் நின்னிடஞ் சேரலா
லென்று மில்லாப் பேரழ குறுதலே.

# அழகின் புக்ககம்!

பருவ வனப்பெலாம் பாங்குடன் திரண்டோர்
உருவாய்ச் சமைந்த உளங்கவர் நங்காய்
நின்பால் எளியனேன் வினவுவ லொன்றே
நின்கா தணிகுழையும் மூக்கணி கலனும்
நுதலணி சுட்டியும் குழலணி மலரும்
இதிலெலாஞ் சிறந்து கழுத்தினைத் தழுவிக்
கிளரொளி பரப்பிடும் வளரிள நித்தில
நளின மணிச்சுடர் நல்லொளி யிலங்கி
வார்சர மதுவும் ஆர்ப்பரித் தொலிக்கும்
சீர்வளை யவையும் செம்மலர் மேனித்
திகழ்நறுந் துகிலும் அவைதரு கடைகளில்
புகழ்பெற வொண்ணுமோ பொங்கொளி மிகுக்கும்
ஆடிப் பெட்டியில் அழகுற விளங்கினும்
நாடி விரும்பும் குழையும் சுட்டியும்
நல்மூக் குத்தியும் பல்முத் தாரமும்
சில்வளைக் கூட்டமும் செறிநூற் கலிங்கமும்
அரும்பு மலர்ந்து புதுமணம் பொங்கி
விரும்பி யணிய விழையும் மலர்களும்
தாம்விலை போகும் கடைகளிற் றங்கி
ஏமுற வில்லாப் பொருளாய் இணைந்து

உன்னிட மணைதலா லொருதனி வனப்பினை
நின்னிடம் பெறுவ தேனென் றுரைப்பாய்
நீண்டு மதர்த்துக் காண்டகு விருப்பில்
வேண்டி நோக்கும் விழியுடைக் கிளியே
அழகை யடைதலா லழகுமோ ரழகினைப்
பழகிப் பெறுமெனும் பான்மையோ வுரைப்பாய்
அன்ன பொருளெலாம் நின்னிடஞ் சேரலா
லென்று மில்லாப் பேரழ குறுதலே.

# உயிர் நாடகம்

தொட்டில் தவழ்ந்தாச்சு—தாய்மடி
    தொட்டுத் தூங்காச்சு
விட்டில் பறந்தாச்சு—சுடர்
    விளக்கிற் கலந்தாச்சு.

சந்திதெருக்களின் மண்ணின்மேல்—நான்
    தவழ்ந்து தவழ்ந்து தளர்ந்தாச்சு
இந்தஉலகெனும் புண்ணின்மேல்—வீண்
    இகல்கள்பலவுங் கிளர்ந்தாச்சு.

சித்தமெனுந்தனி வீதியில் நான்—சிறு
    பற்றுவரவை முடித்தாச்சு
பித்தமனந்தின வைத்த பெருஞ்சுவை
    வாழ்வை நடித்தாச்சு.

விளையாடி அலுத்தாச்சு—விளை
    கூடி விழுந்தாச்சு—உயிர்
நாடி தளர்ந்தாச்சு—உளம்
    பீடு குலைந்தாச்சு.

பிள்ளை இளமை பெருமைமுதுமை—எலாம்
மெள்ள மறந்தாச்சு
கள்ளமனந்தரு கொள்ளை நினைவுகள்
கழன்று துறந்தாச்சு.

வீடுதெருத்தனி நாடுநகர்மிசை—நான்
மேடை திரைத்துணை ஏதுமிலா
தோடிநடித்ததும் உலைந்தாச்சு—உயிர்
நாடகவேலை கலைந்தாச்சு.

நாடகவேளை கழிந்தாச்சு—நான்
ஆடியவேடங் களைந்தாச்சு
ஆடகப்பொன்நகை ஆசைகளும்—உயிர்
ஓசையொடுங்க விழுந்தாச்சு.

சித்திரமொத்த விழித்துணை—மாதர்கள்
கைத்துணை யாடலெலாம்
எத்தனையெத்தனை செய்தாச்சு—இனிச்
செத்தவன்போல நைந்தாச்சு.

செத்தவர்க் கழுதாச்சு—இனிநான்
சாவதற் கழுதாச்சு
கற்பனை பழுதாச்சு—என்
கனவுகள் பொய்யாச்சு.

# சிறு மனமே

எண்ணத்தறியிற் சிறுநினைவு
இழையோட இழையோட
முன்னுக்குப் பின்முரணாய்
முற்றும் கற்பனையாய்ப்
பன்னும் பகற்கனவாய்ப்
பாழாய்ப் பழம்பொய்யாய்
என்னென்ன நினைக்கின்றாய்
ஏழைச் சிறுமனமே!

வாழ்ந்தவை மறந்தாச்சு—இனி
வாழ்வதும் கனவாச்சு
தாழ்ந்தவை உயர்ந்தாச்சு—என்
சரித்திரம் அயர்ந்தாச்சு.

கற்பனை சொற்புனை கவிதைகள்—பெரும்
கால நடையினில் நரைத்தாச்சு
பற்பல கவிஞர்கள்—உலகினில்
பட்ட துயரமே பட்டாச்சு.

மெய்யென நினைந்தவை—விரைவினில்
மெலிந்து மெலிந்து பொய்யாச்சு
பொய்யென நினைந்தவை—சடுதியில்
பொலிந்து பொலிந்து மெய்யாச்சு.

# காலவெள்ளம்

பூ மணக்கும் சோலையெல்லாம் புதியதமிழ்ப்
பாமணக்க வாழ்ந்தபழம் புலவோர்கள்
நா மணக்க வாய்மணக்கச் செய்தகவி
நாதங்கள் காலமெனும் பேரேட்டில்
ஜீவனுக்குப் பரிதவிக்கும் சிறுமைநிலை
தினந்தினமும் கண்டுகண்டு தெளிந்தபினும்
நீ வலுத்து நிலைக்கவெணும் மனத்திமிரை
நீக்கவில்லை நினைக்கின்றாய் திளைக்கின்றாய்!

பொன்கொழிக்கு காவிரிப்பூம் புனற்கரையில்
புவியரசர் பீடுநடை நடந்ததுவும்
மின்னினிடை நங்கையர்கள் அன்னமென
மெல்லியிள மஞ்ஞைநடை பயின்றதுவும்
என்னெனவோ பழம்பெருமை நிகழ்ந்ததுவும்
இன்றில்லை சென்றவிடம் தெரியவில்லை
பின்னும்நீ நினைக்கின்றாய் பெருநினைவு
பொல்லாத காலநிலை மறந்தாயோ!

மூத்தெடுத்துக் கரைகுவித்த கொற்கைமுகம்
மூழ்கிமறைந் தொழிந்தவிட மாரறிவார்
கூத்துகுயில் பொதியமலைக் கழனிவெளி,
கவிவாணர் மனநிறைந்த பலநினைவு,

# சமூக உணர்வில்லாக் கவி

ஆறு குளம்வற்றி
    அரைவயிற்றுப் பட்டினியாய்
நாடுதுயர் முற்றி
    நலிந்திருக்கும் வேளையிலே
கேடுகளை வெட்டக்
    கையேலாச் சோம்பலினால்
மூடியறை யிருந்து
    முடிந்தவரை நினைவழிந்து
வேறுவழியில்லாக் காரணத்தால்
    வீணில்நான் கவியானேன்.

சீறும்காமச் செழுங்கனலில்
    செல்வங்கொழுத்திருக்கப் பழுத்திருக்க
மீறும் வெறிமிகவே
    மேனியெழிற்கன்னியரை மீகாடி
ஓடும் தடியர்மன்றோடே
    உடலையைத் தடுக்காத சோம்பலினால்
ஏடும் சிறுகோலும் கைக்கொண்டு
    ஏதோ அறிவைக் கிழிப்பதுபோல்
பாடும் ஒரு கவியானேன்—வேறு
    பண்பில்லாக் காரணத்தால் பாடானேன்.

இத்தரையில் பெருமைநிறை மதுரைநகர்,
இன்புலவர் மூன்றில்நிறை யுறந்தைநகர்.
எத்தனையோ பழம்பாடல், இவையெல்லாம்
இருந்தவிட மிருந்தொழிய அவையில்லை.

மதுரமொழிக் கவிச்செல்வர் வளர்த்ததமிழ்
மன்றங்கள் சங்கங்கள் இன்றெங்கே?
சதுரர்பலர் களம்நின்று வென்றபுகழ்
சரிதத்தே நின்றதன்றிப் பலனென்ன?
பதறிவரும் விரைவுநிலைப் புதியயுகம்
பழமையெலாம் போயொழியப் பலப்பலவாம்
புதியநிலை கொணர்ந்தாலும் மறப்பறியோம்
பொற்புமிகு பழையவெழில் போற்றிடுவோம்.

ஈசை யறம்பேசி எழுத்துரைகள்
எடுத்தெழுதி வகுத்தெழுதிப்
பாதை வரம்பெடுத்த பகுத்தறிவால்
பலர்வாழும் சமதரும மிகச்சொல்லி
வீதி யிடைவழியில் விழுந்துருளும்
மண்படிந்த தொழுநோ யாளன்
சாதல் கண்டதுவும் பாவமென்று
சாத்திரத்தைத் துணைக்கழைக்கும்
போதமிலாப் புழுக்களிடை வேறுவழியின்றிப்
புகழெடுத்து நானும் கவியானேன்.

பசிக்கின்ற பிறர்பற்றி நானறியேன்
பசியாரப் பாலுண்டு புகழுண்டு
புசிக்கின்ற சோறு மிகவுண்பேன்
புகழுண்ண மேடையிடும் திறமுண்டு
நசிக்கின்ற மனிதகுல நாசங்கள்
நாராசம் நாராசம் செவிகளுக்கே
வசிக்கின்ற மனிதரெலாம் ரசிகர்களாய்
வாழ்வதற்குப் பாட்டெடுத்து ஏட்டெழுதும்
கவிக்குடியில் வேறுவழியில்லாக் காரணத்தால்
கவியெழுத நான்பிறந்தேன் உழைப்பறியேன்.

# குழந்தைப் புதுமை

முத்தொளிரும் சுடர்நெற்றி மேலெல்லாம்
முளைத்தெழுந்த குழல்சரியப்
பட்டொளிரும் சிற்றிதழ்ல் கன்னத்தில்
பார்வை சிரித்திருந்து பளபளக்கும்

சித்தம் போனதிசை சிறுவியப்பாய்ச்
சிரிக்கும் கண்கள் அதிசயமாய்ப்
புத்தம் புதிய பொம்மையினைப்
புறக்கணித்தே மறந்தது போல்.

எத்தைப் பார்த்து மலர்கின்றாள்
எங்கே பார்த்து நினைக்கின்றாள்
நித்தம் பார்த்து நினைவலுத்தே
நினைக்கப் பழசாய்ப் போனதனால்.

குத்துக் கல்போ லருகிருந்தும்
குலவும் பொம்மை கவரவில்லை
சித்தம் கண்டது புதுமையென்றால்
சிறுமி கண்ட புதிதெதுவோ ?

(வேறு)

முத்துநிறப் பிஞ்சுநகைப் பஞ்சுவிரல்
குஞ்சுமொழிக் கிந்தக் குவலயத்தே
அத்தனை பொருளும் அதிசயமே
அத்தனை ஒலியும் பெருவியப்பே

எத்தனை எத்தனை படித்தாலும்
எத்தனை எத்தனை வளர்ந்தாலும்
சித்த நிறைவிற் சிறுகுழந்தை மனம்போலச்
சேரும் பருவம் பிறிதுண்டோ?

# நான் ஒரு பாவலன்

ஆயிரம் கலைத்திறன் அறிந்திருப்பேன்—பல
அற்புதக் கவிமலர் சொரிந்திருப்பேன்
மாயும் உலகிடை நிலைத்திருப்பேன்—சில
மனிதர் நினைவினை அலைத்திருப்பேன்.

நினைவினும் சொல்லினும் தனித்திருப்பேன்—என்
நெஞ்சினும் கவியினும் இனித்திருப்பேன்
துணிவிலும் மெய்யிலும் தளர்வடையேன்—சிறு
துன்ப வெய்யிலில் களைப்படையேன்.

இன்றுவிருப்பி நாளை வெறுத்திடுவார்—அன்றி
இகழ வெறுத்துப் புகழக் குழைந்திடுவார்
மன்றுளாடி மறைவிற் பதுங்கிடுவார்—வெறும்
மனிதர் செல்வமென் கால்தூசாம்.

இன்றும் நாளையும் எந்நாளும்—பலர்
இதய நினைவுகள் கொண்டாட
மன்றும் அரங்கும புகழ்பாட—நான்
மனிதர் நடுவோர் பாவலனாய்.

# சிவ பாதாதிகேசம்

ஒருமானைக் கரங்கொண்ட பெருமானுக் கருகிருக்கும்
உமைமானுக் கடியார்கள் கணக்கற்றோர்
பெருஞான மவர்க்கருளக் கருணைவிழி பிறழ்ந்துலவும்
போதருகில் அருள்பொலியும் விழிஞானம்

தரமாக மனங்கொண்டு கற்றுணர மேல்தாவித்
தழலாடும் கழலாடி கையரங்கில்,
சிறுமானும் நடமாடிச் சிவஞானி மனமாரக்
களிக்கின்ற தென்சொல்வ தென்சொல்வதே !

தெய்வநலம் பொங்கிவளர் திருமுகத்தில் அருள்விழிகள்
சீறியழல் மீறியெழத் தேவியவள்
செய்புலவிக் காற்றாமல் திரிபுரமும் சிரித்தழித்த
சிவன்வணங்கிச் சீறடிகள் பணியுங்கால்

மைந்நீல கண்டன்தன் மணிநுதலில் செவ்விழியும்
மலையரையன் தவமகள்காற் செங்குழம்பும்
மெய்ந்நிறத்தி லொன்றிலொன்று மிகுந்தழுத சிறந்துயரும்
முழுப்படிக வெண்முகத்துச் செம்மணிபோல்

நீறுபொலி தவளநுதற் சிறுவிழி தானிருக்கும்
நெடிய சடைமுடியொழுகு புனலிலிருந்
தாறுவழி தாழவரு மீனெனவே தானிருக்கும்
ஆசைவளர் மாதர்தம தழகுவழி

வேறுபடு காமன்மன வேதனைகள் நீடிவளர்
வேலைசெயும் மோகமலர் வாளிதமைச்
சூறைபட வேயெரிய விழித்தவிழி தொழுபவர்கள்
துன்பமவை நீறுபடத் துணைதருமே!

# மானிடர் நடுவே

தென்றல் பிறந்துவரச்
    செண்பகப்பூப் பூத்துவரக்
கன்றின்குரல் கேட்டுக்
    காராம்பசு ஓடிவர
முன்றில்மாமரத்து முன்கிளையில்
    முத்துநிலாக் கதிர்விரிக்க
ஒன்றோ இரண்டோ குயிலோசை
    ஓரொருகால் இடையிட்டு ஒலியெழுப்ப
என்றோசுவைத்தபல நளினகவி
    இதயத்தே முந்தியெழுந் தலைமோத
இன்றோ நேற்றோ வாராமல்
    என்னுள் நித்திய முற்றனவாய்த்
தோன்று நிகழ்ந்திடு துடிப்பெல்லாம்
    தொடர்ந்து மலரப் பாடுகிறேன்
இன்று நினைப்பவை சுமையென்றால்
    இனியும் சுமக்க நினைத்திருப்பேன்
ஊனுக் கலைந்து பசித்திளைத்தும்
    ஊருக் கெளிய பாமரனாய்

வீணுக் குழைக்கும் சோற்றுலகில்
வேகவேக மனம் நொந்தே
மானிடர் நடுவே விசித்திரமாய்
மந்தையிற் சேராத் தனிப்பசுவாய்
நானும் கவிசுமந்தேன்
நாளும் கவிசுமந்தேன்
உயர்வானம் மிகுபூமி
யுகுபுனல் எரிதழல்
தருவளி பஞ்சபூதம்
அயராதுள நாளெனைத்தோ
அனைத்தும் நானிருப்பேன்

துயரால் அலைந்து
மகிழ்வால் உவந்து
வெயிலால் நனைந்து
மழையால் குளிர்ந்து
மானிடர்நடுவே விசித்திரமாய்
மந்தையில்சேராத் தனிப்பசுவாய்
ஊனக்கண்ணுல் உள்ளொளியால்
உலகைப்பார்க்கும் வெள்ளறிவால்
ஞானத்திடத்தால் நல்லெழிலால்
ஞாயிற்றொளிபோல் புகழொளியால்
நானுமிருந்து கவிசுமப்பேன்,
நாளுமிருந்து கவிசுமப்பேன்.

# ஏ காலமே!

முத்தலைக்கும் தென்குமரி முனைதொடங்கி
        முருகுதவழ் வேங்கடமா மலைவரைக்கும்
பற்றிநிற்கும் தமிழ்மொழியே தனிமொழியே
        பாலொடுதேன் கலந்தசுவைக் கனிமொழியே
எத்திசைக்கும் அறிவுநிலைத் தூதனுப்பி
        எங்கள்புகழ் பரவவைக்கும் மணிமொழியே
இத்தரைக்கு நீபிறந்த பெருமைசொல்ல
        எட்டுணைக்கும் சொல்லில்லை சொல்லில்லையே'

பண்முழங்கு பழம்பாடல் தென்மதுரைப்
        பக்கமெலாம் ஒலித்தபுகழ்க் கனவெங்கே?
விண்முகடு செவிடுபடக் கடலலைகள்
        வீசிநின்ற பூம்புகாரிற் சிற்றிளைஞர்
நன்குரைசெய் மென்குதலை மொழிஎங்கே?
        நந்தமிழர் பேரரசு நாலுதிசைப்
பண்பாடும் புகழுநின்ற பழங்காலப்
        பான்மையெலாம் வெறும்பாழாய்ப் போனதுவோ?

விண்ணூழித் திரைப்பரப்பில்
விடியுமட்டும் கடைந்தெடுத்தே
மண்ணூழி வட்டமெல்லாம்
மகிழவிட்ட ஒளியமுதே
புண்ணாளும் நிறைந்ததென்றோ
போதெல்லாம் காயாமல்
சின்னூழி முகில்நடுவே
சென்றுமறை வாகின்றாய்!

பாராக்கிப் பொழுதாக்கிப்
பலவாம் நாள்திங்கள்
சீராக்கும் ஆண்டூழி
செய்தளித்த தலைக்கனமோ
நேர்வான நிலாத்தேய்வு
நீணிலத்தில் நினக்கில்லா
வீறாப்போ இறுமாப்போ
வேனில்நாள் நின்காய்வே?

சின்னக்கீற்றுக் குடிலினிலே
சில்லிட்ட தரைமேலே
வன்னப்பாய் விரிப்பின்றி
வைபோகம், சையோகம்
என்றின்ன வசதிகளும்
இல்லாமல் என்னுடைய
முன்னங்கால் மடிப்பின்மேல்
முழங்காலைத் திண்டாக்கி

# வைகறை

குங்குமப் பொதி கிழியக்
குலவுமுகில் சிலசிதறிக்
கங்குலெனும் இருட்போர்வை
கரைந்தகல எழுந்ததெனப்
பொங்கிவரும் கதிரொளியே
பூதலத்துச் சுடர்விளக்கே
எங்கள்குலத் திறையமுதே
இன்னொளியே கதிர்தாராய்!

நாளைக்குப் பொழுதலர்ந்தால்
நம்தொல்லை யாயிரமென்(று)
ஊணுக்கும் உடுப்புக்கும்
உழைத்தயர்ந்தே யிரவெல்லாம்
பாழுக்குக் கண்விழித்துப்
பதைபதைத்தே யிருள் தவிக்கும்
ஏழைக்கு நண்பன்போல்
எழுசுடரே! கதிர்தாராய்!

மண்ணுற்ற அழுக்குத்தாள்
மடிவைத்துக் கவியெழுதிக்
கண்ணுற்ற சோர்வுகளும்
காலுற்ற சோர்வுகளும்
புண்ணுற்ற பசிவயிறும்
பொலிவற்ற வெறுமனமும்
எண்ணுற்று எண்ணுற்று
எண்ணமெலாம் சலித்தக்கால்
விண்ணுற்ற கதிரரசே
விடிந்ததென நீவந்தாய்!

அண்ணாந்து பார்த்திட்டேன்
அழிகூரைச் சிறுதுளையின்
கண்வழியாய் விண்ணிருந்து
கண்சிமிட்டிப் பார்க்கின்றாய்
எண்ணற்ற பொழுதெல்லாம்
இருட்கிடந்தேன், விடிகின்றாய்.

# பூவின் பிறப்பு

அந்திமகள் போர்த்த
ஆரிருளின் போர்வையிலே
வெந்து மனம்வாடி
விடிந்தவுடன் மலராகுய்
சந்ததமும் பூத்திருப்பாய்
சருகாகி மண்புகுந்தால்
மந்திரம்போல் மொட்டாவாய்
மறுபடியும் மலராவாய்.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாய்
ஆடிஅயர்ந்தே இருகரமும்
ஓயஉழைப்பார் உழைப்பெல்லாம்
உதிரம்பெருக்கிப் பரந்தபின்னே
காயும்நிலத்துள் கரந்தந்தக்
கைகள்உழைத்த காந்தியினுல்
பூவாய்ப் பூத்து மலர்ந்ததுவே
புத்தம் புதிய ரோஜாவாம்.

# மணிப்புரு

தழல்மூடும் புகை நிறத்தில்—இளந்
தங்கம் பொடித்த சிறகுடனே
சுழன்றேடும் மணிப்புறவே—பசுஞ்
சோலை உயர்மாடம் சுவரென்
றெழுந்தாடும் அணிப்புறவே—நீ
எண்ணிற் சுறுசுறுப்பின் இலக்கணம்
பழந்தாளிற் கவியெழுதும் எனக்கோ—கண்
பார்க்கின்ற மாதிரியாய் ஆகின்ருய்!

வெள்ளி பிதிர்ந்தசில் மணித்துளிபோல்
வேம்பு மலர்ந்தினி துதிர்ந்தாச்சு
கொள்ளை யெழில்தரு மல்விநறும்பூக்
கொல்லை பொல்லென மலர்ந்தாச்சு

பள்ளி கல்லூரிச் சிறைகள்
பரிட்சை முடிந்தபின் விடுத்தாச்சு
பிள்ளை இளைஞர்கள் நினைவினில்
பரிட்சை முடிவெனவே தவிப்பாச்சு.

இத்தரை யுள்ளார் அத்தனைபேர்களும்
இன்குளிர் நாடி யெழுந்தாச்சு
சித்தர்கள் தென்மலைச் சாரலெலாம்
தென்றலின் நாடி துடித்தாச்சு

பெற்றவர் வாயினில் திருமணப்
பேச்சது சூடு பிடித்தாச்சு
சித்திரை நங்கை மலரடி
சிலம்பிடு தளிர்நடை நடந்தாச்சு.

# வேனில் பிறந்தது!
# வேம்பு மலர்ந்தது

ஓடை நெடுங்கரை மணலாச்சு—அலை
ஓடு நறும்புனல் வறண்டாச்சு
கோடை யெழுந்தனல் வெயிலாச்சு—தரை
கூடி யெழுந்துயர் மலைநோக்கிக்

கோடை யூட்டி குற்றாலம்
நாடி விரும்பிநோ டிருப்பாச்சு
சாடி மிகுங்கனல் பொறவாற்றாச்
சென்னை யெனும்நகர் நெருப்பாச்சு

சில்லினிமைத் தென்றல்வளி பிறந்தாச்சு
தேனருவி புனல்பெருகிச் சுரந்தாச்சு
கல்லினிடை முழவிநொலி எழுந்தாச்சு
கானமதில் மாமரங்கள் பழமாச்சு

மெல்லினிமைக் குரவையொலி ஒலித்தாச்சு
மேலவயற் கோடைநட வெடுத்தாச்சு
அல்லலறச் சிறுதெய்வ விழவாச்சு
ஆற்றினிலும் அழகாவந் துறலாச்சு.

# சிட்டுக்குருவி

சின்னக் கூரலகு
சிங்காரப் பைஞ்சிறகு
மின்னும் மணிக்கண்கள்
மேற்கூறை நடுவீடு
முன்றில் கிணற்றடியில்
முடுகிப் பறந்திடுவாய்
சின்னக் குருவியடீ நீயென்
சிட்டுக் குருவியடீ.

# பூம்பொய்கை

வட்டப் பசுமையிலை — அவை
வார்ந்த மரகதமோ — எழில்
கொட்டும் சிவப்புமலர் — அவை
குங்குமக் கொழுந்துகளோ?
தாமரை மலர்ந்தமுகம் — இடுப்பினில்
தங்கப் பொற்குடம்
கோமள மாநிறமேனி — அதில்
குத்துவிளக்கொளி காணும்.

# சுமை

வானம் புயல் சுமப்ப
    வையம் தளிர் சுமப்பக்
கானம் மலர் சுமப்பக்
    கற்பனைகள் மனம் சுமக்க
மோனத் துயர் கனத்து
    முட்டித் ததும்பு நினைவுகளால்
நானும் கவி சுமந்தேன்
    நாளும் கவி சுமந்தேன்.

# வேனில்

தென்பொதிகை கொலுவிருக்கத்
    தென்றல் படையெடுக்கத்
தண்பொழிலும் மலர்க்குலமும்
    தனியிருக்கும் காதலரைப்
புண்படுத்தித் துன்புறுத்தப்
    புதுவிருந்தாய் வருவேனில்
இன்புறவே யிணைந்திருப்பார்
    எழில்வாழ்த்த வளர்ந்திருக்கும்!

# இலையுதிர் காலம்

காயும் சருகுதிர
　　மாவிற் கனல்போற்
பாயும் தளிர்களைப்
　　பச்சைமலை—ஆயன்
கலைதெரிய ஊதும்
　　குழலே கனலும்
இலை யுதிர்
　　காலத் திரவு

# விடிவு

ஆயிரம் விண்மீன் அலங்காரம்—கீழே
    ஆழிமழைக் கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை—மூடும்
    பொய்யிருள் இன்னும் மடியவில்லை
காம நிலாக்கதிர் சாயவில்லை—அந்தக்
    கடற்கரை அலைகள் ஓயவில்லை
சாமக் கோழியும் கூவவில்லை—நிழற்
    சாயை நாயகன் வானில்இல்லை
தூமப் புகையிருள் அகலவில்லை—அவன்
    சுடர்மணித் தேரினும் நகரவில்லை
நாமும் இருளில் தவிக்கின்றோம்—இனி
    நாளை விடிவென நினைக்கின்றோம்.

# சிட்டுக்குருவி

சின்னக் கூரலகு
சிங்காரப் பைஞ்சிறகு
மின்னும் மணிக்கண்கள்
மேற்கூறை நடுவீடு
முன்றில் கிணற்றடியில்
முடுகிப் பறந்திடுவாய்
சின்னக் குருவியடீ நீயென்
சிட்டுக் குருவியடீ.

# பூம்பொய்கை

வட்டப் பசுமையிலை — அவை
வார்ந்த மரகதமோ — எழில்
கொட்டும் சிவப்புமலர் — அவை
குங்குமக் கொழுந்துகளோ?
தாமரை மலர்ந்தமுகம் — இடுப்பினில்
தங்கப் பொற்குடம்
கோமள மாநிறமேனி — அதில்
குத்துவிளக்கொளி காணும்.

# சுமை

வானம் புயல் சுமப்ப
வையம் தளிர் சுமப்பக்
கானம் மலர் சுமப்பக்
கற்பனைகள் மனம் சுமக்க
மோனத் துயர் கனத்து
முட்டித் ததும்பு நினைவுகளால்
நானும் கவி சுமந்தேன்
நாளும் கவி சுமந்தேன்.

# வேனில்

தென்பொதிகை கொலுவிருக்கத்
　　தென்றல் படையெடுக்கத்
தண்பொழிலும் மலர்க்குலமும்
　　தனியிருக்கும் காதலரைப்
புண்படுத்தித் துன்புறுத்தப்
　　புதுவிருந்தாய் வருவேனில்
இன்புறவே யிணைந்திருப்பார்
　　எழில்வாழ்த்த வளர்ந்திருக்கும்!

# கோழி கூவுகிறது

ஆழியலைந்து தரங்க முழக்கும்
    அலைகடல் மருங்கினிலே
மூழ்கி யெழுந்திடு மொளிச்சுடர்
    முன்வரு மெனவோர்
கோழி யெழுந்து மரக்கிளையிற்
    கூவி யழைத்திடல்தான்
வாழிநெடும்புவன மெனத்தனி
    வாழ்த்திடல் காணீர்.

# போட்மெயில் உலா

[விரோதி வருஷம் சூன்ய மாஸம் 27-ந் தேதி இரவு தனுஷ்கோடியிலிருந்து வர வேண்டிய போட்மெயிலுக்காகத் திருச்சி ஜங்ஷனில் காத்திருந்து காத்திருந்து அலுத்த தஞ்சாவூர்க் கருணைமுத்துக் கவிராயர் பாதித் தூக்கத்திலும் பாதி விழிப்பிலுமாக இயற்றிய போட்மெயில் உலா.]

காப்பு

கொண்ட வழிமேல் குலையா தருண்டோடும்
தண்டவாள மத்தனையும் சாட்சியாய் — என்றன்
ரயில்கவிதை ராசி விபத்தின்றி யோங்க
மெயில்பயணம் போல மிகுந்து.

சேதுக் கடற்கரையில் தெற்கு மூலையிலே
சீராமன் படையெடுக்கக் கடலடைத்தே
ஓதும் குரக்கினங்கள் ஓடியுழைத்த
உயர்வை நினைத்துத் தயங்கினையோ
காதம் பலகடந்து கண்ணில் கரிதூவிக்
காலம் தவறியதி லேட்டாய் வந்த
பாவம் தொலைக்கச் சேதுரா மேச்சரம்
பாஷாணம் என்று முழுகப் போயினையோ

கூவம் நதிக்கரையி லெழும்பூர் நிலையத்தைக்
கூடிச் சேர மனம் வெதும்பு காரணத்தால்
காலம் நேரம் குறிப்பின்றிக் கண்டவழியே
கால் போய்த் தயங்கினையோ மயங்கினையோ
பாலம், பாதை யேதும் சீரின்றிப்
பதுங்கிப் பதுங்கி ஊர்ந்தனையோ உலைந்தனையோ
பாம்பன் கடல்மேல் பம்மி வருகையிலே
பயந்து கீழ்நோக்கிப் பதறி வியந்தனையோ
சாம்பார் சாதத்துக் காசை வைத்துத்
தயங்கி நின்று மறுகினையோ உருகினையோ
போட் மெயிலென் றுனைப் புகழும்
புகழ் மொழி யின்றழிந் தொழிய
லேட் மெயிலென் றிங்கிருப்பார்
லேசாகக் கேலி செய்து நகைக்கின்றார்
இந்தோ ஸிலோன் எக்ஸ்பிரஸென் றுள்ள பெயர்
எடுத்துரைக்கத் தயங்கி யின்று பலகுறும்பர்
மந்த-ஸிலோன் எக்ஸ்பிரஸென் றுள் ளுரைத்து
மனம் புழுங்கிக் கால்கடுக்க நிற்கின்றார்
மந்திரிமார் வந்ததனுல் மதிப்புக்கு லேட்டாச்சோ?
எந்திரத்தில் கோளாருய் எடுப்பான முதல்
வகுப்பில்
மின்விசிறி விளக்கெதுவும் எரியாமல் மனம்எரிந்து
முதல்வகுப்புப் பயணத்தார் மூண்டெழுந்த
கோபத்தால்
கதகதத்துக் 'கார்டு'விடம் புகலடைந்த
காரணத்தால்
மதமதத்து லேட்டாச்சோ மதருஸ் போகியிலே

அப்பர்பெர்த் தகராறு அடிஉதையாய் வளர்ந்ததனால்
எப்பவும்போல் இன்றும் லேட்டாச்சோ?

போட் மெயிலே நீ லேட் மெயிலாய்ப்
போன துயர் வேதனையாலிந் நள்ளிரவில்
கார்ட் லயனில் போகிறவர் போயொழியக்
கால் மாடு தலை மாடாய்த் தூங்கும் சனக்கடலில்
இருச்சிக் கடியில் உரிச்ச வாழைப்பழம்
இன்று நீர்பருகித் திகைத்து நிற்கின்றேன்.
வெறிச்சுப் போன தண்ட வாளம்
வீற்று வீற்றுய்த் தெரிதோற்றம்
சலிச்சுப் போன கண்களிரண்டும்
சாய்ந்து தூங்கத் தவிக்குதையோ
குறிச்ச நேரம் வாராமல் எங்கெங்கோ
குமைந்து போன போட்மெயிலே
சங்கிலியைப் பிடித்திழுத்துத் தடுத்திருப்பார்

(அல்லாது)

தனவணிகர் காரைக்குடி தேவகோட்டைக்
கருகினிலே
பொங்கிநிறை செல்வம் பார்த்துப் பூரித்திருப்பாய்
நாட்டரசன் கோட்டையிலே நிற்க
நயமில்லையானாலும்
பாட்டரசன் கம்பனது சமாதியினைப் பார்த்து வரப்
பாதையில்லா வாதனையில் தவித்திருப்பாய்
மெலிந்திருப்பாய்
சின்னமருது பெரியமருது செய்தபல சாகஸங்கள்
சேரும் சிவகங்கைக் கடியிலே போட்மெயிலே

சொன்ன நேரம் தவிர நீயாகச்
சொந்த நேரம் கொஞ்சம் நின்றிருப்பாய்
மண்டபத்துக் கடற்காய்ச்சல் கொண்டனையோ
மானாமதுரை யிலே போனால் போகட்டுமென்று
கொண்டு வந்து ரயில்கடியில் விற்கின்ற கூடைகளில்
குழவிவெள் ளரிப்பிஞ்சு தின்று பாருகரின்றி
மண்டு தாகத்தால் மலைத்துப் போயினையோ
மதிசேர் ராம்நாட்டுச் சேதுபதிகள் மாளிகையை
மூண்டி நிமிர்ந்து பார்க்க முயன்றனையோ
முதுமன்னர் புதுக்கோட்டை மதிற்கோட்டை
வனப்பழகைக்
கண்டு நேரம் தெரியாது களித்தனையோ
காதம் பலகடந்த களைப்பினிலே தவிப்பினிலே
அண்டிவரும் குட்ஸ்வாகன் அதன்மேலே மோதி
வலித்தனையோ?
ஐயையோ அடுத்தநாள் பேப்பரிலே
போட்டிடுவான்
சிண்டு முடியும் பொதுக்கூட்ட மேடையிலே
சீறிப் பேசிக் குறைபுகல்வார் முறைகிளப்பார்
பண்டுமுதல் இன்றுவரை பேர்பெற்ற போட்மெயிலே
பாவம் நின்குறையோ என்குறையோ?
ஈதெல்லாம்
ரெண்டில் ராகு மூணில் கேது நிலைத்ததனால்
லேட்டாய் வரவேண்டி நேர்ந்தாச்சி
போனால் போகட்டும் உன்வேளை சரியில்லை
புகழ் சரபோஜி தஞ்சைநகர்த் தமிழரசான்
கானக் கருணைமுத்துப் புலவனென் பேரென்பார்
ஏனோ தோணினதைப் பாடி வச்சேன்
நீது போட்மெயில் உலாவாய்ப் புகழ் பெறுக!

# பட்டினப்பாலை

(புது ரகம்)

முன்னெப்போ தெனத் தெரியாக்
காலமுதன்மையிலே
சென்னப்ப நாயக்கன்
பேர்சேர்ந்த நகராகிப்
பின்னிப்போ பட்டினமாய்ப்
பெருகி வளர்ந்துவிட்ட
சென்னைப் பேரூரில்
திருவல்லிக் கேணியிலே
வன்னப் பாய்விரித்த
வனப்புப் போல்
சின்ன மணல் சரிந்த
சிங்காரக் கடற்கரையில்
முன்னும் பின்னும்
முந்திவரு கும்பலிடைச்
சின்ன முறுக்கும்
சுண்டல் முந்திரியும்
கூவி விலைபேசும்
குப்புராயர் சாட்சியொடு
சீவி யெறிவதுபோல்

சொன்ன நேரம் தவிர நீயாகச்
சொந்த நேரம் கொஞ்சம் நின்றிருப்பாய்
மண்டபத்துக் கடற்காய்ச்சல் கொண்டனையோ
மானாமதுரை யிலே போனால் போகட்டுமென்று
கொண்டு வந்து ரயில்கடியில் விற்கின்ற கூடைகளில்
குழவிவெள் ளரிப்பிஞ்சு தின்று பருகநீரின்றி
மண்டு தாகத்தால் மலைத்துப் போயினையோ
மதிசேர் ராம்நாட்டுச் சேதுபதிகள் மாளிகையை
மூண்டி நிமிர்ந்து பார்க்க முயன்றனையோ
முதுமன்னர் புதுக்கோட்டை மதிற்கோட்டை
வனப்பழகைக்
கண்டு நேரம் தெரியாது கழித்தனையோ
காதம் பலகடந்த களைப்பினிலே தவிப்பினிலே
அண்டிவரும் குட்ஸ்வாகன் அதன்மேலே மோதி
வலித்தனையோ?
ஐயையோ அடுத்தநாள் பேப்பரிலே
போட்டிடுவான்
சிண்டு முடியும் பொதுக்கூட்ட மேடையிலே
சீறிப் பேசிக் குறைபுகல்வார் முறைகிளப்பார்
பண்டுமுதல் இன்றுவரை பேர்பெற்ற போட்மெயிலே
பாவம் நின்குறையோ என்குறையோ?
ஈதெல்லாம்
ரெண்டில் ராகு மூணில் கேது நிலைத்ததனால்
லேட்டாய் வரவேண்டி நேர்ந்தாச்சு
போனால் போகட்டும் உன்வேளை சரியில்லை
புகழ் சரபோஜி தஞ்சைநகர்த் தமிழரசான்
கானக் கருணைமுத்துப் புலவனென் பேரென்பார்
ஏனோ தோணினதைப் பாடி வச்சேன்
ஈது போட்மெயில் உலாவாய்ப் புகழ் பெறுக!

சீறும் அலையோரம்
சிந்தனை கனத்திருக்க
காவில் வல்லவர்கள்
காலூன்றி போராகக்
காவல் கட்டின்றிக்
கதைகதைத்து வம்பளக்கும்
நீண்ட நினைவுகளை
நீங்கள் கேட்டருள
சென்னை நகர்க் கடைவீதி
சின்னதொரு மயனுலகம்
அன்னைசத்திய மிவையொழிய
என்ன பொருளேனும்
இங்கிருக்க விலைபோகும்,
பட்டினப் பாலையென்றார்
பட்டினமே பாலையாகும்
எட்டுணையும் ஐயமின்றி
எள்ளளவும் மெய்யின்றிப்
பத்திரிகைக் காரரென்னும்
துட்டர் உலவுகின்ற
துணிவான மவுண்ட்ரோடு
இட்டார் இடாதோர்
எனப் பேதமில்லாமல்
அட்டணங்கால் வாழ்க்கையினில்
அனைவோரும் சுகம் காண
முட்டாள் சனங்களுக்கு
முதற்காட்சி இராக்காட்சி

பற்றுக் குறைக் கென்றோர்
பகற்காட்சி என்றெல்லாம்
வற்றாத சினிமாக்கள்
வளைந்தளிக்கும் ஹாலிவுட்டாம்
கொற்றமிகு கோடம்பாக்கம்
குவலயத்தோர் தமக்குள்ளே
உற்றால் லறிவுடனே
உலவுகின்றோர் ஒருசிலரே
மற்றவர்கள் எல்லாரும்
மனத்தெளிவு பெறுவதற்காய்
கற்றவர்கள் வைத்தியஞ்செய்
கானகம்போற் கீழ்ப்பாக்கம்
வெற்றியினை நீதிமன்றில்
விலைபேசும் வக்கீல்கள்
எத்திசையும் நிறைந்திருக்கும்
இதமான மைலாப்பூர்
முத்திபெறும் சுகவாச
மோஸ்தரிலே பெரியவர்கள்
அத்திபூத்ததுபோல் அடையாறு
தாம்பூல சுகங்காணும்
சரியான வசதியுடன்
மாம்பல மென்றுரைக்கின்ற
மதராஸ் அக்ரஹாரம்
வட்டிக் கடைகள்நிறை
வடசென்னை ராயவரம்
பெட்டிக் கடைகள்நிறை
பீச்ரோடு பெரம்பூர்

தங்கம் விலைபோகும்
தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனாக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னாடை
போலீக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்தமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதருணில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

வெட்டித் தனத்துக்கும்
விருப்புப் பேசுதற்கும்
கெட்டும் பட்டணஞ்சேர்
கெடுவதற்கும் பட்டணஞ்சேர்
சட்டசபை மந்திரிமார்
சதிராடும் கேள்வி பதில்
கெட்டாலும் வாழ்ந்தாலும்
கீர்த்திதரும் அரசியல்கள்
எத்தாலும் பிழைக்கின்ற
லகுவான தொழில்வகைகள்
மூத்தாலும் பொன்னாலும்
மூடவில்லை எனைரும்
சற்றே வயிருரச்
சவுகரிய முள்ளதனால்
பட்டினத்தை நாள்தோறும்
பாய்ந்துவந்து சூழ்கின்ற
பலலட்சம் பெருமக்கள்
ஆய்ந்தால் இங்கிவர்கள்
அயராத திண்ணையில்லை
உண்ண உணவில்லை
உடுக்க உடையில்லை
தண்ணீர்த் தவிப்பிற்குத்
தாகங்குறைய நீரில்லை
கண்ணீர்த் தவிப்பிற்குக்
கருணைபெருக வழியில்லை
எண்ணில் நரகவேதனைதான்
என்ருலும் இதைவிட்டால்

தங்கம் விலைபோகும்
தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னுடை
போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதருளில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
　　தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
　　எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
　　மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
　　தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரினாக்கடலருகே
　　எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
　　இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
　　இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னாடை
　　போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
　　இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
　　இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
　　மதராஸில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
　　பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
　　கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனாக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தவொரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தவொரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னாடை
போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதநூலில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னுடை
போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதருணில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
தப்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனாக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னாடை
போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதருணில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரீனாக்கடலருகே
எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தவொரு சுகமல்லால்
இப்பெரிய பட்டினத்தில்
எந்தவொரு சுகமும் மீதம்
இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னுடை
போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
மதருணில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
கிளுகிளுக்கும் தியேட்டரென

தங்கம் விலைபோகும்
    தம்புசெட்டித் தெருவுடனே
எங்கும் பொன்னாகும்
    எங்கள் தங்கசாலை
மங்காத புகழ்நிறைந்து
    மதிவல்லார் குடியிருக்கும்
செங்குமுதக் குளக்கரையில்
    தென்சென்னைத் திருவல்லிக்கேணி
எங்கள் பெரினக்கடலருகே
    எல்லாரும் காற்றுவாங்கும்
இந்தஒரு சுகமல்லால்
    இப்பெரிய பட்டினத்தில்
எந்தஒரு சுகமும் மீதம்
    இருப்பதுவாய்த் தெரியவில்லை.

பொய்க்குப் பொன்னாடை
    போலிக்கு மணிவிழா
எய்க்கும் சத்தியங்கள்
    இளைக்கும் கவிவாணர்
என்றெல்லாக் கூத்துமுடன்
    இனிதாக வளர்கின்ற
மன்றில்லாத் தெருவில்லை
    மதருளில் உருவில்லை
பட்டினத்தில் பாதியிடம்
    பாவையர்கள் புடைவைக்கடை
கிட்டினதில் மீதியிடம்
    கிளுகிளுக்கும் தியேட்டரென

மண்ணில் வாழவழியில்லை
மனத்தில் விரிவில்லா
மானிடரே பலரெனினும்
இடத்திற் பெரியபட்டினத்தில்
சானிடரி வசதிகளும்
தண்ணீர் தங்குமிடம்
மின்சாரம் மருந்துவகை
மோகத் திரைப்படங்கள்
நள்ளிரவில் ரகசியமாய்
நாடறிய விலைபோகும்
கள்ளச் சாராயம்
கருப்புமார்க்கெட் காதல்
மெள்ளக் கண்ணைசைத்து
மேலாக்கை நழுவவிடும்
சில்லறைச் சுகபோகம்
சிவபூஜை கதாகாலட்சேபம்
எல்லாமே விலையுள்ள
தென்றாலும் இங்கெம்போல்
காசறியாக் கவிகளுக்கு
ஓசிக் காற்றளிக்கும்
உப்புக் கடலிருக்க
உவகையோ உவகையடா!

# பத்திரிகை அட்டைப்படக் கதாநாயகி!

இட்டுக்கட்டி எடுத்த பொய்க் கூந்தல்
　　இடைதெரியும் கடையுடைகள் ஏகதேசம்
பட்டுச் செம்பவழ மேனியொடு மெய்யில்
　　கட்டுக் கட்டாய் நிறைந்த உடலழகு
கண்ணில் இதழில் கன்னத்தி லங்கங்கே
　　விட்டுத் தெரியும் நாகரிக வெளிமுறுவல்
விளக்கம் வேறென்ன? இவள்தான் தமிழில் பத்திரிகை
　　அட்டைக்குப் படமென்றே பிறந்திருக்கும்
　　　　　　　　　　　　　　மோகனாங்கி

அஞ்சு லட்சம் பத்துலட்ச மதற்குமேலும்
　　சட்டுச் சட்டென்று விற்று முதலாகும்
சரசபோக உல்லாசச் சல்லாபப்
　　பத்திரிகை யெத்தனையி லிருந்தாலும்
　　　　　　　　　　　　　　அத்தனையும்
பளிச்சுப் பளிச்சென்று படமெடுத்துக் கலரடித்து
　　உத்தரியம் மேலாடை ஒன்றிரண்டு குறைந்துவர
ஓரம் ஒதுங்க உள்ளம் பிதுங்கச்
　　சித்திரமாய் வரைகின்ற செலுலாய்டுச் சிங்காரி.

சிறிதும் மாருமல் யூவனவலாய் வருகின்ற
பத்திரிகைக் காதலுக்குப் பலநாளாய்ப் படமாகிப்
பலலட்சம் விலைபோகும் சிலையொத்த உடலழகி
எத்தனையோ விதமாகப் புத்தம் புதிதாகி
இங்குள்ள வார மாத இதழெல்லாம் பதம்பார்த்து
அத்தனையும் மாற்றி மாற்றி *அளித்தபின்னும்
அணுவளவும் மாருமல் சோராமல் சிரிக்கின்ற
பத்தினியாய் நிற்கின்ற பத்திரிகைப் படத்தரசி.

*பாடபேதம்...அடித்த

# நாவலோ நாவல்!

ஓவல் காபியுடன் தேநீரும்
உற்சாகப் புகழுரைக்க ஏனோரும்
சீவல் வெற்றிலையே ஆனாலும்
செடிமார்க்குப் புகையிலையும் சாரோட்டக்
காவல் வெளிப்புறத்தே தேடிவரும்
கழுத்தறுப்பு மனிதருக்குக் கைவிரிக்க
நாவல் தனைப்படைத்த வேளையினை
நாவில் உரைப்படுத்த வார்த்தையிலை!

நாவலோ நாவலென நடைவாசற் படியேறி
நாவலிக்கக் கூவல்கேட்டு நான்போனேன்
ஆவலுடன் போயங்கே பார்த்தாலோ
ஆச்சரியம் ஆச்சரியம் அங்கொருத்தி
தாவணியைச் சிப்மாடாய்க் கூடைநிறை
தளதளக்கக் கருங்கனிகள் அள்ளிஅள்ளி
நாவற்பழம் விற்றாள் மிகமலிவே!
நாவற் கதைகளினும் மிகமலிவே.

# எரிந்தேன்

ஆசை எரித்தது சரிபாதி—நான்
ஆசையில் எரிந்தது மறுபாதி
வேசையர் காமப் போதுகளும்—நல்
வித்தைகள் கற்கும் போதுகளும்
கூசி யணுகிப் பழகியபின்—பல
கொத்து முந்திரி மதுவினிலே
தூசி யெனநான் எரிந்தவும்—இங்கு
துயரம் நிறைந்த கதையாகும்

செத்தபின் உலகில் என்னுடலைச்—சிறு
சிதையி லெரிப்பர் என்றிங்கே
சுற்றமும் உறவும் நண்பர்களும்—பல
சொல்லுதல் முற்றும் வீணாகும்
பற்றி எரிந்தே போனபின்னர்—இனிப்
பாலகர் எரிக்க வருவதற்கு
சற்றும் உடலம் மீதமில்லை—நான்
சரியாய் எரிந்து வெந்துவிட்டேன்

# அன்னபூரணி

ஆரணங் கவிதை யோகம்
அறிவுநற் கலைகள் யாவும்
சீருறப் பொலிந்து பின்னும்
செழுந்தமிழ் நிலத்து வாழும்
வீரர்கள் கவிஞர்கள் வேதியர்
வேண்டிடும் செல்வியே அன்ன
பூரணித் தெய்வமே அருளாய்
புனிதமா சித்திகள் பெருகவென்றே!

ஆசை எரித்தது சரிபாதி—நான்
ஆசையில் எரிந்தது மறுபாதி
காசும் மணியும் கற்பனையும்—என்
கனகக் கவிகளின் நினைவுகளும்
பேசி எரிந்தது பெரும்பகுதி—நான்
பேசா தெரிந்தது சிறுபகுதி
ஓசை யடங்க எரிந்ததுவும்—பல
உவகை மடங்கி யெரிந்ததுவும்

பேசிற் பெரிய கதையாகும்
புகழிற் பெரிய நதியாகும்
தேசிற் சிறந்த வாழ்க்கையினிற்
சிறிது சிறிதாய் எரிந்திருந்தேன்
காசிற் கெரிந்தது பலவேளை
கஞ்சிக் கெரிந்ததும் பலவேளை
யாசித் தெரிந்தது சிலவேளை
யோசித் தெரிந்ததும் சிலவேளை

வாழ்ந்தே யெரிந்த ஒருவனைநீர்—இனி
வாழ்ந்தபின் னெரிக்க வழியேது
தாழ்ந்து மெரிந்த சமயங்கள்—நான்
தருக்கி யெரிந்த சமயங்கள்
வீழ்ந்தே எரிந்த சமயங்கள்—பெரு
வீரத் தெரிந்த சமயங்கள்
வாழ்ந்தே யெரிந்த சாம்பரைநீர்—இனி
வாழ்த்தி எரிக்க வழியேது?

ஆசை எரித்தது சரிபாதி—நான்
ஆசையில் எரிந்தது மறுபாதி
வேசிகள் எரித்தது பலபாகம்—மிகு
வேகமதுக்கள் எரித்தது சிலபாகம்
நாச வாழ்வு முழுவதுமே—நான்
நடுங்கி நடுங்கி எரிந்திருந்தேன்
போசனம் நாடி அடிவயிற்றில்—நாளும்
புதிது புதிதாய் எரிந்திருந்தேன்.

வாழ்ந்தே எரிந்த சாம்பலஃரநீர்—இனி
வாழ்த்தி எரிக்க வழியேது?
வாழ்ந்தே எரிந்த ஒருவனைநீர்—இனி
வாழ்ந்தபின் எரிக்க வழியேது
ஆழ்ந்தே யுணர்ந்து சிந்தித்தால்—உலகில்
அத்தனை நாளும் எரிகின்றோம்
மாய்ந்தே மறைந்து போனபின்னர்—இங்கு
மற்றவர் எரிக்க வருகின்றார்.

சற்றும் உடலம் மீதமின்றி—நாம்
சரியாய் எரிந்து வெந்தபின்னர்
மற்றவர் எரிக்க வழியேது—அந்த
மற்றவர் எரிவதைத் தாம்மறந்து
செத்தவர்க் கழலிட வருவதிலே—நாம்
சிரித்திட லன்றிச் செயலேது
பற்றி யெரியும் உடலுடையோன்—முன்பு
பற்று தெரிந்ததை எரிப்பதென்னே?

எண்ணிஎண்ணி யெரிந்த தொன்ரே—நான்
எழுதிஎழுதி யெரிந்த தொன்ரே
மண்ணில் எரிந்தது பலவிதமாம்—என்
மனத்தில் எரிந்ததும் சிலவிதமாம்
புண்ணிய பாவ நினைவுகளில்—இங்கு
புகுந்து புகுந்தே எரிந்துவந்தேன்
பண்ணிய வினைகளில் அங்கங்கே—அழல்
பற்றி யெரிந்ததும் என்றென்ரே?

# எண்ணம்

நெஞ்சக் கிளை நடுவே
    நினைவுமலர் பூத்துப்
பிஞ்சுப்பருவ முருவாகிப்
    பின்புபல கனவெல்லாம்

கொஞ்சிக் குலவித்
    திரண்டு கனியாகி
எஞ்சி நிலைத்ததெல்லாம்
    எண்ணப் பழுங்கந்தல்

மண்ணிற் பிறந்து—துயர்
    மண்டிச் சுமந்து
எண்ணற் றிறந்தகதை—பல
    எத்தனை கேட்டறிவேன்
    எத்தனை கண்டறிவேன்.

# தாயின் ஏக்கம்

பொட்டிட்டு மையிட்டுப்
பூவெல்லாம் பின்னிவைத்து
மெட்டிவளை மோதிரமென்
றிவையெல்லாம் மேலிட்டுப்
பட்டுச் சிற்றாடையுடன்
பவழமணி மாலையிட்டுக்
கட்டிட்டுக் காப்பிட்டுக்
கைநிறைய மருதோன்றி
கொட்டிட்டுச் சிவப்பாக்கிக்
கொஞ்சுதலும் குலவலுமாய்ப்
பெற்றிட்டுப் பேரிட்டுப்
புறம்நீவி வளர்த்ததெல்லாம்
போயொருவன் மனைபுகவோ?

# வரவு

முத்துநிலா நகைவிரிய
    முன்னிரவு நேரத்தில்
கத்துகுயில் ஒலியுருதம்
    கானகத்து மாந்தோப்பில்
சித்திரம்போல் வந்தவளே
    சிற்றடியின் மெட்டியொலி
எத்திசையும் நாதமிட
    எங்கிருந்து வந்தாய்நீ

# பரிட்சைக்குப் படிக்கிறார்கள்!

அவன்:

இந்தப் பரிட்சை தேறியபின்
சந்தைக் கடைநிகர் புவிவாழ்வில்
வந்த வரன்களைக் கைகூப்பி
வாசற் கதவோரம் சிறுநேரம்
சுந்தர இளைஞர்கள் பலபேரைச்
சோர விழித்திருட்டுக் களவாடி
எந்த மனைக்கோ(நாளை) விளக்காவாள்
இந்த விளக்கிலின்(று) படிக்கின்றாள்.

அவன்:

சித்திரை வெயில் மறந்து
திரைப்பட நினைப் பிழந்து
பத்திரிகை நாவல் தொடர்கின்ற
பலகதைகள் இவை துறந்து
சித்தம் பரிட்சைத் தவமாகி
செய்கை படிப்புப் பசியாகிப்
பெற்றவர் கனவு பாசாகப்
பிள்ளைகள் ஆடும் போராட்டம்.

# கவியுலகில் கம்பன்

கவியரங்கத் தலைவர்க்கும்
கவியரசன் புகழ்பாடிக்
கம்பன் கம்பனென்றே
கருத்துரைத்துத் துடித்திருக்கும்
செஞ்சொற் கவிஞர்க்கும்
சேர்ந்திருக்கும் அவையோர்க்கும்
கொஞ்சம் வணங்கிப்பின்
கூறுவது மிகவுண்டு

கவிவட்டம் கலைவட்டம்
திரைவட்டம் தனிவட்டம்எனப்
புவிவட்டம் நிறைமட்டும்
பலவட்டம் மிகவிருந்தும்
பரிவட்டம் கட்டுவதும்
பரஸ்பரமாய்ப் புகழ்வதுவும்
பிரிபட்டுப் போனவுடன்
புதுச்சங்கம் தொடங்குவதும்

படுமட்டமாய்த் திட்டுவதும்
பாராட்டும் மறுப்புரையும்
ரசமட்டமாய்ப் பேசுவதும்
நடைமுறையாய் நிகழ்ந்துவரும்

---

தமிழ் வட்டக் கவியரங்கில் பாடியவை

பிடிபட்டதொரு பழக்கத்தைப்
பெற்றுவிட்ட சென்னையிலே
தமிழ்வட்டம் பிறந்தபின்னால்
தரப்பிறக்கும் தமிழ்சிறக்கும்

உரம்பிறக்கும் நெஞ்சில்
நலம்பிறக்கும் எனநம்பிக்
கவிவட்டம் வகுத்திருக்கும்
தலைப்பினுக்கு வருகின்றேன்
கவியுலகிற் கம்பனென்றே
கவிபாடப் பணித்திருந்தும்
புவியளந்த நெடுமாலைப்
புதியதமிழ்க் காவியமாம்

கவியளந்த கம்பனெங்கள்
கற்பனையின் சடையவள்ளல்
தனியளந்த தமிழ்க்கவியை
இனியளந்து பாடுதற்கும்
என்தமிழில் கூறுதற்கும்
நனிநயந்து வெட்காமல்
நானும்தான் பாடுவதோ?
பொன்னைப் பொருளைப் பூவையரைப்
பிரியாறும் பருவத்தில்

மின்னைப்போல் மெல்லிடையார்
மேனிநயங்கள் விழிதேரும்
சின்னஞ் சிறுவயதில் இளமையினில்
செப்பிடு வித்தையைப் போல்தன்

சொல்லைக் காமுற வைத்தே—என்
சிந்தைதிறை கொண்டான் கம்பன்.
வெண்பா அகவல் கலிப்பா வஞ்சிப்பா
வேண்டுமட்டும் மருட்பா
கண்பார்த்து ரசிப்பதற்கு முரசபந்தம்
கைநிறைய யமகம் திரிபு
பின்பாட்டுப் பாடுதற்கும் பக்குவமாய்ப்
பதவுரைகள் பொழிப்புரைகள் விரித்துரைகள்

தன்போக்கில் தருவதற்கும் வரைவதற்கும்
தமிழ்க்குருக்கள் பலரிருக்க
என் நாக்கில் தேன் சுவைக்க
எடுத்தோதப் பூமணக்கத்
தன் நாக்கில் விருத்தம் என்னும்
சங்கீதத் தமிழ்செய்தான் கம்பன்.
முன்வாக்கில் முதுவாக்கில்
மூத்தோர்கள் சான்றோர்கள்

தம்வாக்கில் செல்வாக்கில்
தமிழென்றால் தலைவன் தலைவி
உண்பாக்குத் தின்பாக்கு
உலாமடல் அந்தாதி
பண்பாடு குறிக்கோள்களென்றே
உப்புக்கும் கூழுக்கும் தமிழ்விற்றுப்
பம்மாத்துப் பண்ணிவந்த
பலசரக்குப் புலவரிடைக்

கண்பார்க்கப் புதுமையென
எழுந்துவந்தான் கவியுலகில்.
சங்கீதத் தமிழென்று சொன்னேன்—ஆம்!
சங்கீத மொழியினிலே பலப்பலவாய்ச்
சங்கதிகள் நிரவல்கள், தொனிநயங்கள்
சங்கேத ஒலிநயங்கள் மிகுந்திருக்கும்
சங்கத் தமிழென்னும் ரகசியத்தை
எங்கள் கம்பனெடுத் தேதோசெய்து

என்றும் சாகாத புத்திளமை தந்துவிட்டான்
கவியுலகிற் கம்பனென்று பெயர் கொடுத்தீர்
களன்றுடனே சினம் கொள்வேன்
கவியுமுலகும் ஏதோ பெரிதெனவும்
கம்பன் அதிலோர் கூறெனவும்
பெரிய பகுப்பாய்க் கவியுலகைப்
போட்டுவிட்டுப்பின் கம்பனென்றே
சிறிய தொகுப்பாய்ச் சொல்லுகிறீர்

செந்தமிழிற் கவியும்உலகும்
தெரிவதற்கும் புரிவதற்கும்
சுழியிட்டுத் தொடங்கியஎம்
பெரியவனைக் கவியுலகில் அடக்காதீர்
கவியுமுலகும் அடங்குவதும் கம்பனுள்ளே
தொடங்குவதும் அவன் தொட்டே
மெல்லச் செவ்விதழ் நெகிழ்ந்து
மேனி புளகமுற முகமலர்ந்தே

கள்ளச் சிறுநகையிற் சூறையிடும்—ஒரு
    கன்னிப் பிள்ளையைப்போல்
        காதல்போல்
செல்லத் தமிழென்று கொண்டாடிச்
    சொல்லுதற்கும் புகழுதற்கும் சொகுசுபெற
வெல்லத் தமிழ்கொடுத்த கவிவீரன்
    வெற்றித் தமிழ்கொடுத்த சொல்லழகன்.

எட்டுவகைக் குணநலத்தால் அழகனென்றே
    எடுத்தெடுத்துச் சொல்லுகிறீர்
பட்டுச்சரிகை பளபளக்கும் மேலாடை
    படபடக்கும் டம்பச்சொல்
சுட்டு விரலசைத்தால் ஓடிவந்தே
    சொன்னபடி கேட்கும் சொல்லணிகள்
        சுரிதகம் மடக்கென்று
ஓட்டக் கூத்தாடி உழன்றலைந்து
    உருக்குலைந்து கருக்கலைந்தே
தட்டுத்தடுமாறித் தலைகனத்த காலத்தில்
    தமிழ்என்று கம்பன் செய்தான்!

பாட்டெழுதி நூலெழுதித் தமிழ்விளங்கத்
        தனிவிளங்கச்
    செய்தபல பாவலருள்
ஏட்டெழுதி வணங்கவல்லான்
        கம்பனன்றோ உறுதியன்றோ
    என்றுமுள தென்தமிழை

செவிக்கினிய சங்கீதம் சத்கதைகள்
திரைப்படங்கள் நாடகங்கள் நடனங்கள்
நாற்கினிய பட்டினத்தில் மறவாமற்
சரியாய் நினைவிருத்தி யார்வமுடன்
வரற்குரிய கவியரங்க மிதுவென்றே
வந்திருக்கும் பெரியோரே அரியோரே
பெறற்கரிய பெருங்கவிகள் பலப்பலவாய்ப்
புனைந்தளிக்கும் புலவோரே சொல்லுழவீர்!

அனைவர்க்கும் என்வணக்கம் இங்குள்ள
அவையோர்க்கு முன்வணக்கம் முதல்வணக்கம்
எனையின்று பாடென்று தமிழ்வட்டம்
எடுத்தளித்த பொருள்உழவன் ஆதலினால்
மனைமன்றம் பேரூர்மாநகரம் வளநாடு
மண்ணுலக மத்தனையும் புவிமீதில்
முனைநின்று மேழிபிடிப்பான் வேளாளன்
முகம்மலர மலர்ந்திருக்கும் கிளர்ந்திருக்கும்.

வில்லுழவன் சொல்லுழவன் என்றெல்லாம்
விதம்விதமாய்ப் பலதுறையும் பேசுங்கால்
சொல்லளவில் உழவினையே பொதுவாக்கிச்
சிறப்பெல்லாம் உழவனுக்கே யுறவாக்கி
எல்லையிலாப் பெருந்திறனில் இயற்றுகிற
எக்கலையும் உழுகலைக்குச் சமமாக்கிச்
சொல்லுமொரு வழக்கிந்தத் தமிழகத்தில்
தொன்றுதொட்டு வந்ததெனக் காண்கின்றோம்.

களத்தேறிப் போர்புரியும் படையினுக்குக்
கடுகளவும் குறைவறியாப் பெருமையினை
நிலத்தேரில் மேழிபிடித் தழுதிடுவான்
நிச்சயமாய்த் தானடைய வேண்டுமெனக்
கலப்பைக்குப் பேரிடுங்கால் உழுபடையென்
றழைத்திட்டுக் கருத்துயர்ந்த தமிழ்கண்டார்
நிலத்தளவில் ஏர்பிடிப்போர் நேர்பிடித்தால்
கார்பிடிக்கும் போர்செயிக்கும் பார்பிடிக்கும்.

இல்லாளின் ஊடிவிடும் நிலமென்றே
எடுத்தெழுதி வைத்ததொரு காரணத்தால்
நல்லாண்மை யுடையான்தன் மனையாளை
நலம்பேணிப் போற்றுதல்போல் உழுபடையான்
செல்லாமை, புறக்கணித்தல், சிறிதுமின்றிச்
சீராளும் இல்லறம்போல் தன்நிலத்தைப்
பல்லாற்றும் பயன்நிறையப் புரந்தளித்துப்
பார்புகழும் பேரறமாய்க் காத்திருப்பான்.

சொல்லைக்குழைத் தழுதுசெயும் கவியரசன்
சொர்க்கங்கள் படைக்கின்ற வேதாந்தி
வில்லைக்குழைத் தரசோச்சும் வியன்மறவன்
விஞ்ஞானி மதியமைச்சன் வேல்வீரன்
கல்லைக்குழைத் தழகுசெயும் கலைவாணன்
காசினியில் அனைவோர்க்கும் உழுபடையோன்
மண்ணைக்குழைத் தழுதளிக்க வயிறுறும்
மனமாறும் பசியாறும் கலைதோன்றும்.

தாளாளன் தயவாளன் தரித்திரத்தைத்
    தள்ளிவிடும் தளராத பொருளாளன்
வேளாளன் உழுவதனுல் வாழ்கின்றேம்
    மேழிபிடித்திருக்கும் மேலோன் கைவளமே
நாடாளும் செங்கோலின் நல்வளமாம்
    நாழியரிசி குறைதற்கும் மிகுதற்கும்
நீடுழி வாழ்தற்கும் அழிதற்கும்
    நீணிலத்தை உழுவோன்தான் காரணமாம்.

சுற்றிப்பல சுழன்றுலும் இவ்வுலகம்
    சூதறியா உழவன்பின் செல்வதென
முற்றுமுணர் வள்ளுவனுர் கூறியபின்
    மேழி பிடிப்பாரே மூதுலகைச்
சுற்றிச் சுழற்றுமோர் அச்சாணி
    துறவோரும் சுகிப்போரும் பிறவோரும்
பற்றற்றே மென்றுலும்; உழவுடையார்
    பற்றற்றுல் *பற்றற்றுர் பற்றற்றுரே!

உழுதிருப்பார் கையிரண்டும் உரமிருக்கும்
    உற்றெருவர் ஆணையிடாத் தனிநிலையில்
முழுதிருக்கும் கொழுமுனையில் உயிரிருக்கும்
    மூதுலகில் கற்றறிவார் பேரறிஞர்
பளபளக்கும் ஒளிமிகுந்த புறவாழ்வில்
    பகட்டிருக்கும் பலதுறையரர் இவரெல்லாம்
தொழுதிருப்பார் அழுதிருப்பார் பழுதிருப்பார்
    தொல்லுலகில் தொழுதறியான் அழுதறியான்

*பற்று=சோற்றுப் பருக்கை.

பழுதறியான் பகட்டறியான் உழுதறிவான்
உலகறிவான் உலகளப்பான்; உலகளந்தான்
முழுதறியா ஞாலத்தை (இவன்)உழுதறிவான்
முழுதறிவான் விளைவறிவான் களைஎறிவான்
எழுதரிய சீர்த்தியென இவ்வுலகில்
ஏதேனும் உண்டாயின் சத்தியமாய்
உழுதுறையான் மீதிருக்கும் சீர்த்தியொன்றே
ஒருதுறையும் அடையாத தனிச்சீர்த்தி.

அவன்தியாகி இவன்தியாகி அதுதியாகம் இதுதியாகம் என்றனுதினமும்
அகப்பட்ட பேர்களெல்லாம் தியாகியாகும் இந்நாளில்
இவன்தியாகி எனச்சொல்லிப் புகழ்வதற்கு நிச்சயமாய் ஒருவனுளன்
எவர்வழியும் குறுக்கிடாமல் ஏங்குமழை வான்பார்த்துப்
பயன்கருதி மண்ணுழுவான் கைகளிலே பொன்ஒளிரா புகழ்ஒளிரா
பிறர்நலமே குறிக்கோளாய்க் கலப்பையினிற் புரட்சிசெயும்
இவன்தியாகி என்றுரத்த குரலெடுத்துப் புகழ்முழக்கம் முழக்கிடுவீர்
இவன்தியாகி யில்லையெனில் வேறெவன்தியாகி என்றுரைப்பீர்?

முதல்நாள் தொடக்கவிழா முழுநாள் நிறைவுவிழா
முற்றியபின் ஆண்டுவிழா வெள்ளிவிழா
விதவிதமாய்ப் பொன்விழா வைரவிழா என்றெல்லாம்
வீதிகளில் வீடுகளில் மாடங்களில்

கோட்டெழுதி அடகுவைத்துப் பிழைப்பாக்கி
நூலறிவு சிறிதுமின்றி மேடைகளில்
ஆட்டமிடும் சிலரைப்போல் பாவலராயாகாமல்
ஆரவாரப் பாட்டெழுதித்

தேட்டமிட்டுத் தவித்தலைந்து தேடித்தேடிச்
சிலஎதுகை சிலமோனை என்றெழுதும்
காட்டுக் கவிராயர் பரம்பரையான் இவனல்லன்
கம்பன்ஐயா தமிழ்க் கம்பன்
நீட்டும் கவித்திறத்தால் உலகேழும் அளக்கின்ற
திறலாளன் தமிழழகன்
பாட்டுப் பிறந்த தென்றால்
இவன்பாடப் பிறந்ததன்றிப்
பிறர்பாடப் பிறக்கவில்லை
கேட்டு மனத்திருத்திச் சென்றுவாரும்
கரங்கூப்பி விடைகொள்வேன்.

# உழவன்

கவிக்கிரங்கப் பயப்படுவோர் உண்மைக்
கலைக்குருகத் தயங்கிடுவோர் எல்லார்க்கும்
செவிக்கிறங்கித் தமிழ்பெருகச் செய்வதனால்
சென்னையெலாம் மொழிவளரப் பயன்நிறையப்
புவிக்கணியாய்ப் பிறந்தகவிப் புலவோர்கள்
புதுமைகளாய்ப் பெருமைகளாய் நிறைந்திங்கே
நமக்கிருக்கும் இலக்கியத்தின் செல்வமெலாம்
நன்றாகும் இன்றாகும் எனநம்பித்

திரைவட்டம் கலைவட்டம் கவிவட்டம்
தெற்குவட்டம் வடக்குவட்டம் கிழக்குவட்டம்
அவர்வட்டம் இவர்வட்டம் பொதுவட்டம்
அதுவட்டம் இதுவட்டம் எனக்கிட்டும்
அரைவெட்டும் கால்வெட்டும் இளவெட்டும்
அங்கொன்று மிங்கொன்றுமாய்த் தனித்தனியே
தறிகெட்டு நிற்கையிலே கதிரொளிபோல்
தமிழ்வட்டம் இருக்குமட்டும் கவலையில்லை.

எதனைதற்கோ விழாஎடுப்போம் புகழுரைப்போம்
வாழ்த்தெடுப்போம்
ஏரெடுத்துச் சால்பிடித்து உழுதிடுவான்
புதுப்புதிதாய் மண்புரட்டும் நாளெல்லாம் திருநாளாம்
பூமியினில் உழுநாளாய் வருநாளில்

மதிப்பறியாச் சிறுநாள்கள் ஏதுமில்லை என்றுமில்லை
மண்ணைக் காதலிப்பார்தம் தேசபக்தி
விதிப்பயத்தை வீண்பயத்தைப் பசிப்பயத்தைக்
கொழுமுனையால்
பலகாதம் விரட்டிடுவான் பக்தியினும்
மிகப்பெரிதோ அளப்பரிதோ சொலப்புதிதோ கூறிடுவீர்?
பசிக்கொடுமை தணித்திடுவான் புகழ்பாட
நிசிப்பொழுதும் உறங்காமல் நித்தியமாம் காவியங்கள்
நேர்ந்தளிக்க முயன்றாலும் போதாதே!

உழுதறிவான் பெருமையினைப் பாடிவர
உலகளவு நாளேனும் போதாது
தொழுதறியும் புலமைக்(கு) அதைச்செய்யும்
துணிவளவும் போதாது காணாது
பழுதறியாத் தமிழவையீர்! குறிப்பறிவீர்
பலசொல்லி வளர்ப்பானேன்; தேவையில்லை
உழுதறியோ மென்றாலும் உண்டறிவோம்
உழவன் பெருமை கண்டறிவோம்

பொழுதறியும் நாளறியும் புவியறியும்
புதிதென்றும் நேற்றென்றும் தலைமுறைகள்
எழுதற்கும் அழிதற்கும் இடமுண்டு
என்றாலும் உழுதிருப்பான் பெருமிதங்கள்
விழுதற்கு ஒருசிறிதும் இடமில்லை
வீரத்தைக் கொழுமுனையில் தந்திடுவோன்
தொழுதற்கு மிகத்தக்கோன் எனக்கூறிச்
சென்றிடுவேன் விடைகொண்டேன் வணக்கம்!

# அகவொளியும் புறவெளியும்

பொதிகைமலைக் குறுமுனிவன் முதலாகப்
புலவர்பலர் தாலாட்டிச் சீராட்டிப்
பொதுவில் வளர்த்த தமிழ்நிதியைப்
புதுமை நிதம்வளரும் கவிமதியில்
வதுவை மணம்காண வனைந்ததிருக்
காவணத்துப் பாவரங்கில் வந்தறிவீர்
புதிய தமிழ்ச்சுவைக்குப் புகலறிவீர்
புறவெளியும் அகவொளியும் கேட்டறிவீர்

கள்ளூறு மணமலர்கள் பலகாவிற்
கவினுறப் பூத்திருந்து வண்டாறித்
தள்ளாடு மயக்கத்தே சாலையெலாம்
தமிழான நறுமணங்கள் மணந்திருக்கும்
பொள்ளாச்சி நகர்மிசையே பொலிந்திருக்கும்
பொன்னகர மயன்கூட மின்னதெனக்
கொள்ளாச்சீர் மணப்பந்தல் இதனிடையே
கூறவரும் கவியரங்கில் பேறுடையேன்

---

பொள்ளாச்சி கவியரங்கம் 3-8-69

முத்ததமிழ்க் கவிராய சொக்கலிங்கர்
முன்னிருக்க சொல்லில் எழுத்தில்
யாத்தமனச் சிந்தனையில் அங்கங்கே
அரிதெனவும் நன்றெனவும் உள்ளதெலாம்
பூத்தமுக மலர்ந்து புன்னகையிற்
செவிசாய்த்துப் புகழ்நா மகாலிங்கம்
கேட்கவளர்கின்ற கவியரங்கம் இதுவென்றால்
கீர்த்திக்கு நற்சான்று பிறிதெதுவோ

ஒன்பதின்மர் பெருங்கவிஞர் எனக்குமுன்னே
உலகறியப் புறவெளியும் அகவொளியும்
பண்பறியும் தமிழ்க்கவியிற் பகர்ந்திட்டார்
பார்த்திருந்தீர் கேட்டிருந்தீர் ஆர்த்திருந்தீர்
என்பதற்குப் பின்னுமினி யானென்ன
சொல்வதற்கு மீதமுள தென்றுமல்
மன்பதைக்குப் புறவெளியும் அகவொளியும்
மனத்துணரப் புகல்கின்றேன் சிலவார்த்தை.

சந்திரனைச் செவ்வாயை வான்வெளியில்
சார்ந்திருக்கும் பலப்பலவாம் கோள்களினை
இந்தாளனுமுன் போயடைந்து நடைநடந்து
இறங்கிவரும் விஞ்ஞானக் காலமிதில்
இந்தியர்நாம் என்பதனைக் காட்டுதல்போல்
இகபரமும் புறமகமும் அறமறமும்
சந்ததமாய் நடுநின்று உலகிதனைச்
சுழற்றுமொரு சிந்தனையை மறந்தறியோம்.

உள்ளும் புறமுமென எக்காலும்
உள்ளத்தை முன்வைத்துப் பேசுவதும்
தெள்ளத் தெளிநீராற் றினந்தோறும்
செய்தூய்மை புறத்தனையும் என்றுரைத்து
உள்ளத் தெளிவுப் உயர் தூய்மையுமே
உண்மை யதுகொண்டு கண்டறியும்
வள்ளுவனார் முதற்கொண்டு வந்தனைகொள்
மோகனதாஸ் காந்திவரை யவதரித்தும்

கள்ளம் மறையவில்லை இந்நாட்டிற்
கயமை குறையவில்லை எங்கெங்கோ
வெள்ளம் வறட்சி பூகம்பமென
விதம்விதமாய்ப் புறவெளியில் துயரங்கள்
தள்ளும் வறுமைமிடி யித்தனையும்
தள்ளா திருந்தாலும் இங்கெமது
உள்ளம் நனையவில்லை அதனிடையே
உருகும்கருணை உதிரம் பெருகவில்லை.

பதவிக்குத் திரிகின்ற பரபரப்பும்
பணத்துக்குக் கரைகின்ற அரசியலும்
உதயத்தில் ஒருகட்சி விடியுங்கால்
ஊரறிய மறுகட்சி என்றிங்கே
சிதையச் சிதையக் கண்டுவரும்
சிறுமைச் செயல்கள் ஒவ்வொன்றும்
கதையில் ராமனெனத் தருமனெனக்
கற்றறிந்த பழம்பெயர்கள் அறமுறைகள்

அத்தனையும் செத்தொழிந்து அகமென்றும்
ஒளியென்றும் தரமென்றும் முறையென்றும்
எத்தனையோ பல்லூழிக் காலமுதல்
இந்நாட்டில் பேசிவந்த பொதுநீதி
சத்தியமாய்த் தவறிவிட்ட புறஉலகில்
சரித்திரத்தைப் புரட்டிவைத்துச் சான்றுகளைப்
பத்திரமாய் தேடலன்றி நம்நாளில்
பவித்திரமாய்த் தேடுதற்குப் பொருளேது?

முன்னைப் பழமையெனும் பெயர்சொல்லி
முதுகு சொரிதற்கும் புகழ்வதற்கும்
தொன்னைக்கு நெய்யாதார மென்பதுபோல்
தொல்பெருமை வாய்கிழியப் பேசுதற்கும்
என்றைக்கும் இருக்கின்ற இறுமாப்பில்
எழுந்திருந்து நடமாடும் பெருமையன்றி
இன்றைக்கு நாம்செய்த தேதுமில்லை
எல்லாமே பழம்பெருமை என்றறிவோம்.

ஈராயிரம் ஆண்டெனும் காலவெள்ளம்
நம்மிடையே உடலாலும் நூலாலும்
வாராதே வந்த மாமணிபோல்
வள்ளுவனார் வாழ்ந்திருந்த பின்னாலும்
போராடும் மனப்பான்மை போகவில்லை
பொய்பேசும் நாகரிகம் சாகவில்லை
தேரோடும் வீதியிலே மனுநீதி
தெரிந்துணர்ந்த நம்நாட்டில் தவநாட்டில்

வேரோடும் சத்தியத்தின் வித்தாகக்
காந்தியெனும் தவஞானி புதுமுனிவர்
ஓராடை முழந்தாள்மேல் உடுத்ததனி
உத்தமரும் நூறாண்டு நிறைகின்றார்
பாரிற் கருணைமிகும் உள்ளொளியால்
பலகோடி இந்தியர்கள் சிந்தனையைச்
சேரும் ஒருகுறிக்கோள் நிலையினுக்குத்
திருப்பிவிட்ட கடைசிப் பெருந்தகையார்

வெள்ளைப் பூவிதழாய்ச் சுடர்விரிக்கும்
அகல்விளக்கில் திண்ணையினில், குடிசையினில்
பிள்ளைப் பருவத்தில் அந்நாளில்சிறு
பேதை வயதில் முன்னாளில்
உள்ளொளியை எண்ணித் தவித்திருந்தோம்
உயர்தவம் மோனம் இவற்றை
வெள்ளை மனத்திடையே பொதிந்திருந்தோம்
விஞ்ஞானம், புறஉலகைக் காட்டியபின்

அகவொளி போய்நம் மனத்திடையே
அகங்கார மின்சாரம் பாய்ந்ததுவே
மிகவொளிரும் பெருவெளிச்ச மேடையிலே
மெய்யை எங்கேயோ கைதவறவிட்டிட்டோம்
புறவெளியிற் கண்கூசி மறைத்ததனால்
பாரதமாம் நம்நாட்டின் செல்வமெலாம்
அறவொளியில் அகவொளியில் கிளைத்தெழ
அறியுமொரு திறனையும் நாம்மறந்தோம்

முன்னூல்கள் பலவற்றைக் கற்குங்கால்
முதறிஞர் பொன்னுரைகள் கேட்குங்கால்
பன்னூறு ஆண்டுகட்கு முன்னாலே
பாரதமாம் திருநாட்டில் பெருநாட்டில்

தொன்னூல்கள் புகழுமொரு தருமநெறி
தூய்மை மனவல்மை சத்தியமென்
றின்னின்ன பொருள்களெலாம் இருந்ததென
இயம்பலன்றி யிருப்பதென உரைப்பதென்னோ?

மாதவத்தோன் காந்தியென மனத்திருத்தி
மாட்சிமையாய் நூற்றாண்டு விழாவெடுக்கும்
கோதகன்ற நன்னினைவுச் சீராண்டில்
குலுக்கல் குலுக்கலாய் லாட்டரிகள்
சூதாட்ட அரசியலில் பகடைக்காய்
சுழல்வதுபோல் மானிடர்கள் இடம்மாறல்
ஏதெடுத்தும் எப்படியும் பணம்செய்யும்
இழிதகைமைப் பேராசை புறவெளியில்

ஈதென்ன கொடுமையென மனத்தினிலே
எடுத்தெடுத்துச் சிந்தித்து மாய்ந்தாலும்
ஏதென்ன செய்தாலும் புரியவில்லை
இந்தியர்தம் அகவொளியைத் தூண்டுதற்கு
மாதவத்து வள்ளுவரும் காந்தியொடு
வள்ளலாரும் ஆழ்வார்கள் நாயன்மாரும்
தோதாக மீண்டுமொரு பிறப்பெடுத்துத்
தோன்றுவது மின்றிங்கே அவசியமாம்.

சத்தியத்தை மொத்தத்தும் சில்லறைக்கும்
சரிசமமாய் எடைபோட்டு விற்பதொடு
பத்திரிகைப் புகழுக்காய் மேடையேறும்
பம்மாத்து வேலைகளை அன்றாடம்
வித்தகமாய்ச் செய்துவரும் பிரமுகர்களும்
வெளிவேஷப் பித்தர்களும், பொய்யர்களும்
எத்திசையும் மலிந்துவிட்ட இந்நாளில்
ஏதையா அகவொளியும் மனச்சான்றும்?

தொன்ணூறு விழுக்காடு நம்மிடையே
தூய்தான உள்ளொளியை மனச்சான்றைக்
கண்ணேறு படாதவகை அழித்துவிட்டுக்
காரியத்திற் சுயநலத்திற் கருத்தாகி
முன்னேறி வருவதாகப் புகழ்ந்துகொளும்
மூட நிலைமையினில் இன்றிருக்க
நன்னோக்கும் அறநெறியும் மனத்துள்ளே
நப்பாசையாய் விடமுடியா நன்னசையாய்

பாரோரிலர்க் கிங்கே மீதமிருப்பதனால்
அகவொளியும் புறவொளியும் என்றரங்கில்
தேரும்கவி பாடக் கூப்பிட்டார்
சிந்திக்க நம்மனத்தை ஊக்கிட்டார்
ஏரும் கலப்பையுமே இல்லாமல்
எழுத்தெண்ணிக் கவியெழுதும் சொல்லுழவீர்
(பேரவையீர்) கூறும் வணக்கமொடு விடைகொண்டேன்
கொள்கையெனும் உள்ளொளியில் புறவெளியே

பாடும் ஆசையுமோர் புகழ்வேட்டையெனப்
பரிதவித்துத் தலைகுனிவேன் நிலைகுலைவேன்
காடும் நகரும் பலஊருமினி
நலியும் பஞ்சமுடன் அழிபசியும்
ஓடும் நிலைவளர்த்தே வளம்சுரக்க
உள்ளொளியைப் பெருக்கிடுவோர் தொகைபெருகப்
போதும் கவிதையிவை கொஞ்சம்
புத்தியுடன் மௌனத்தைப் போற்றிடுவோம்.

தொண்ணூறு விழுக்காடு நம்மிடையே
தூய்தான உள்ளொளியை மனச்சான்றைக்
கண்ணேறு படாதவகை அழித்துவிட்டுக்
காரியத்திற் சுயநலத்திற் கருத்தாகி
முன்னேறி வருவதாகப் புகழ்ந்துகொளும்
மூட நிலைமையினில் இன்றிருக்க
நன்றேக்கும் அறநெறியும் மனத்துள்ளே
நப்பாசையாய் விடமுடியா நன்னசையாய்

யாரோசிலர்க் கிங்கே மீதமிருப்பதனால்
அகவொளியும் புறவொளியும் என்றரங்கில்
தேருங்கவி பாடக் கூப்பிட்டார்
சிந்திக்க நம்மனத்தை ஊக்கிட்டார்
ஏரும் கலப்பையுமே இல்லாமல்
எழுத்தெண்ணிக் கவியெழுதும் சொல்லுழவீர்
(பேரவையீர்)கூறும் வணக்கமொடு விடைகொண்டேன்
கொள்கையெனும் உள்ளொளியில் புறவெளியே

பாடும் ஆசையுமோர் புகழ்வேட்டையெனப்
பரிதவித்துத் தலைகுனிவேன் நிலைகுலைவேன்
நாடும் நகரும் பலவூருமினி
நலியும் பஞ்சமுடன் அழிபசியும்
ஓடும் நிலைவளர்த்தே வளப்சுரக்க
உள்ளொளியைப் பெருக்கிடுவோர் தொகைபெருகப்
போதும் கவிதையிவை கொஞ்சம்
புத்தியுடன் மௌனத்தைப் போற்றிடுவோம்.

# பாரத தேவிக்கு வேண்டுகோள்

வெண்பனி போர்த்து வீறுகொண்டோங்கும்
பேர்பெறுமிமயம்
கண்பனி பெருக்கக் கடமையிற் பெருகும் கங்கையாம்
பெருநதி
இன்றிவை சான்றாய் நன்றுநாம் கொள்ளும்
சபதமொன்றுண்டு
வஞ்சகச் சீனர் வாய்மையில் கொடியவர்
நெஞ்சினில் மெய்யிலாப் பாக்கிஸ் தானியரென்றிவர்
பாரத தேசமாம் பைம்பொழில் மலர்வனம்
வேரற முயலும் வெறித்தன வீண்செயல்
நீறுறச் செய்வோம் பேரறச் செய்வோம்
அமைதியும் சாந்தியும் சமமுறப் பெருகுதல்
சத்தியமும் கருணையும் மிக்குயர்ந் தோங்கிடல்
நித்தியக் கடமையாய்க் கொண்டவர் நம்மவர்
ஆயினும் நம்மனம் சீறிடச் செய்யும்
பேயர்கள் போர்ச்செயல் பொறுத்திடல் முடியா.
தீயினிற் சூழும் செருமுனை எதிரிகள்
தூசெனத் தொலையப் பாசறை காண்குவம்
மாசறு பாரத மாபெரும் தேவியைத்
தேசபக்தியாம் மலர்கொடு பணிந்தோம் துணிந்தோம்.

---

*பாகிஸ்தான் ஆக்கிரமிப்பின்போது பாடியது.

(வேறு)

கோடி கோடி வீரர்கள் நம்மவர்
கொள்கை நெஞ்சு கோணிடாத மனத்தினர்
சாடி நொறுக்கிச் சத்துரு எதிர்த்தலும்
கூடியெழுந்து குமுறும் திடத்தினர்
வீடு வாசல் துறந்தவர் பலப்பலர்
காடுகள் கழனிகள் அழிந்தவர் பலப்பலர்—எனினும்

(வேறு)

கேடுறாத தேசபக்தி நெஞ்சிலென்று முன்மையால்
வீடுறாத தேசமென்று பாரதத்தைச் சொல்லலாம்
போர்வராத உலகமென்று தேவையென்று பேசினோம்
போத ஞான மேன்மையெங்கும் தூவினோம்

ஆயினும்

போர் மிகுந்து நம்மை வந்து தாக்கிடில்
பொறுமை யென்ன பயன்விளைந்து காத்திடும்?
சோர்வெழுந்து வீழ்ந்ததாக எதிரி நம்மைக்
கோழையென்றும்
சீர்குறைந்த வார்த்தை சொல்ல லாகுமோ?
சத்தியவீரம் என்றுமிங்கு சாய்ந்ததில்லையே
சரித்திரங்கள் என்றுமிங்கு தோல்விசொல்லி
மாய்ந்ததில்லையே.
நித்தியமாக நம்கரங்கள் மேலெழுந்து நிற்குமே
நீதியான தேவியெங்கள் பாரதத்து மண்ணின்மேல்
சோதியாக மேலொளிர்ந்து தெய்வமாக நிற்குமட்டும்

(வேறு)

சோதனைக்குத் தோற்றிடோம் வேதனைக்கு வீழ்ந்திடோம்
தோள் நிமிர்த்தி நிற்கிறோம் வாகைமாலை சூடுவோம்

தேர்முகத்தில் கீதைசொன்ன பேர்மிகுந்த கடமையிற்
தெய்வமான தத்துவங்கள் தேவையான மிகவுண்டு
போர்முகத்தில் எதிருளார்கள் நேர்நடப்பில் உறவினோர்
நேற்று முந்தை நட்பினோர் என்றிருந்த மாயினும்
கண்ணனன்று விசனுக்குச் சொன்ன வார்த்தை
காதிருக்கும் நினைவிருக்கும் கடமையாக மேலிருக்கும்

(வேறு)

வலுவிற் போரைத் தேடியிங்கு செய்திடோம்
வந்த போரை அஞ்சி நின்று விட்டிடோம்
செருவிற் புலியாம் இந்தியாவின் போர்த்திறம்
தேசமெங்கும் பேசுகின்ற புகழ்படைத்து வாழுவோம்

(வேறு)

பொதுவில் ஒன்று வேண்டுவம் பாரத தேவியே!
பொல்லாத வேளையிந்தப் போதாத வேளையிலே
வல்லமை, சத்தியம், வயிரநெஞ்ச, இவை மூன்றும்
நல்லவையாக எமக்கருள்வாய் நாங்கள்
ஜயித்திருப்போம்.

# மகாத்மா காந்தி

எழிலார்ந்த பேரிமயம் இன்னறுநீர்க்கங்கை
இந்தியநற் றவநாட்டின்
பொழிலார்ந்த தபோவனங்கள் புண்ணியமாம்
புனிதநெறி கண்டளித்தோர்
வழியோர்ந்து தெரிந்தளிக்க நம்நாளில்
வந்துதித்த புதுமுனிவன்
பழிதேர்ந்து விலக்குகின்ற பண்பாளன்
பாரதத்தின் மார்க்கபந்து

சத்தியத்தைப் பொதுநெறியைச் சமத்துவத்தைச்
சாற்றுகின்ற சித்தார்த்தன்
இத்திசையில் நாம்காண நம்நாளில்
எழுந்துவந்த புதுச்சித்தன்
பக்தியொடு பொறையாற்றல் பண்பாடு
பதறாத சன்மார்க்கம்
நித்தியமாய் வளர்கின்ற நேயமனம்
நின்மலனும் காந்தியருள்

# நேரு

மேருவைப்போல் பெரும் பெயரான்
மேதினியோர் புகழ்மொழியால் பெறும்பெயரான்
தாருவைப்போல் கொடை நெஞ்சம்
தருக்கறியாக் குழந்தை மனம்
சீருயரச் சிவந்த திருமேனி
சிந்து புன்முறுவல் முகப்பொலிவு
பாருயரப் பஞ்சசீல மிகுநலங்கள்
பண்பாடு குடிப்பெருமை யினையவற்றால்
நேருவைப்போல் பெருந்தலைவர் பிறரில்லை
நேருவின்பின் வருந்தலைவர் பிறரில்லை
சீர்ரவரும் அயல்நாட்டார் மனங்கவரச்
சரித்திரத்தே நிற்குமொரு தனிப்புகழான்
நேரவரும் கங்கையெழில் நதிக்கால்கள்
நீந்திவரச் சேர்ந்துவந்த பண்டிதர்கள்
பேருயரக் குடிப்பிறந்தோன் படிப்பளந்தோன்
பெரும்பெயரைத் தரும்பெயர்கள் தழைக்கமாதோ!

# லால்பகதூர் சாஸ்திரி

நெஞ்சொலிக்கும் குரலிலெல்லாம் புகழ்வடிவாய்
நெடிதிருக்கும் லால்பகதூர் நுமை
அஞ்சலிசெய் தாறுகின்றோம் என்றாலும்
ஆறாததுயரெழுந்து வாடுகின்றோம்.

வஞ்சகரைக் கருவறுக்க வருநாளில்—இனி
வழியில்லா தலமரும்போ
நெஞ்சாமல் நினைப்பதற்காய் இந்நாட்டில்
எஞ்சும் ஒருபெயர்தான் உமதாகும்!

ஒற்றுமைகொள் சமதர்மம் தீண்டாமை
    யொருவுகின்ற பொதுவாழ்வு
கற்றுயர எல்லார்க்கும் கல்விதரும்
    கனிவான பொதுத்தொண்டு
வெற்றிபெறும் புதுவாழ்வு தேசபக்தி
    வீரம் கருணை பாரதத்தில்
முற்றுமுயர் பெருநலங்கள் முழுதும்வர
    மோகனதாஸ் காந்தி வந்தான்.

மோகனதாஸ் காந்திவந்து தோன்றியபின்
    முக்தியைப்போல் புதுநலங்கள்
வாகுவாகெனவே வந்துதித்த காரணத்தால்
    வருங்காலம் தருந்துயர்கள்
போகு போகெனவெ போயொழியப்
    புண்ணியனும் காந்திதரு
போகநெறி வழியே நடந்தெங்கள்
    புதுநாட்டைச் சமைத்துயர்வோம்.

ஒற்றுமைகொள் சமதர்மம் தீண்டாமை
    யொருவுகின்ற பொதுவாழ்வு
கற்றுயர எல்லார்க்கும் கல்விதரும்
    கனிவான பொதுத்தொண்டு
வெற்றிபெறும் புதுவாழ்வு தேசபக்தி
    வீரம் கருணை பாரதத்தில்
முற்றுமுயர் பெருநலங்கள் முழுதும்வர
    மோகனதாஸ் காந்தி வந்தான்.

மோகனதாஸ் காந்திவந்து தோன்றியபின்
    முக்தியைப்போல் புதுநலங்கள்
வாகுவாகெனவே வந்துதித்த காரணத்தால்
    வருங்காலம் தருந்துயர்கள்
போகு போகெனவெ போயொழியப்
    புண்ணியனும் காந்திதரு
போகநெறி வழியே நடந்தெங்கள்
    புதுநாட்டைச் சமைத்துயர்வோம்.

# லால்பகதூர் சாஸ்திரி

நெஞ்சொலிக்கும் குரலிலெல்லாம் புகழ்வடிவாய்
நெடி திருக்கும் லால்பகதூர் நுமை
அஞ்சலிசெய் தாறுகின்றோம் என்றாலும்
ஆறாததுயரெழுந்து வாடுகின்றோம்.

வஞ்சகரைக் கருவறுக்க வருநாளில்—இனி
வழியில்லா தலமரும்போ
தெஞ்சாமல் நினைப்பதற்காய் இங்நாட்டில்
எஞ்சும் ஒருபெயர்தான் உமதாகும்!

# பாரதி பெயர்

சீரார்ந்த தென்னாட்டு மூவேந்தர் செல்வத்தால்
தேரூர்ந்த காவலர்கள் செழித்துவரு செந்தமிழை
பாராளோர் பதவுரையாய்ப் பொழிப்புரையாய்ப்
பள்ளிகளில்

ஈராறும் மூவாறும் எண்ணியிடு மதிப்பெண்ணுக்
ஊரூராய் விற்றுவரும் சாரமிலாத் தலைமுறையில்
கூரேறிக் கூர்ந்துவரும் கூர்த்தமதி நுட்பமுடன்
நாவாரப் பாடவந்த கவிநம்பி பாரதியை
நாமேதும் புகழ்வதற்குச் சொல்லில்லை சொல்லில்லை.

ஆனாலும்

பூத்துவளர் பெரும்புகழால் பிறழ்ந்தொளிரும்
தமிழ்க்குலத்தே.

புதுமைக் கவிபடைத்தும் கதையுரைத்தும்
கட்டுரைத்தும்.

நேற்றுவரை இன்றுவரை சொல்லுமுவார் கரங்களெலாம்
நினைப்பினிலே சொல்லினிலே செயல்களிலே
தொழுதக்கான்

ஈற்றுவரை மறப்பறியான் எனத்தக்கான் ஒருவனுளன்

யாரென்பீர்

சாற்றிடுவேம் தோளிரண்டும் விம்மியெழத் தைரியமாய்ப்
போற்றிடுவேம் புகழுரைப்போம் புதியகவிப் பரம்பரையின்
ஆற்றலிலே மூச்சிருக்கும் காலங்கள் அத்தனையும்
அவன்பெயரே பேச்சிருக்கும் பாரதியென் றெழுத்திருக்கும்

இருந்திடலால்

வாழும் தமிழ்மரபின் கவிவனப்பை வரைந்தெழுதச்
சூழும் சரிதமெலாம் அவன்பெயரால் தொடங்குமென
நாளும் கருத்திருத்தித் தொழுதிருப்போம் நாமிருப்போம்.

# ப. ஜீவானந்தம்

மூவாத் தமிழ்முழங்க முன்னின் றெளியவர்கள்
நாவாய்க் குரல்கொடுக்க நாமார் துணைபெறுவோம்
ஜீவானந் தத்தை யிழந்திங் கினிஎன்றும்
ஓவாத் துயரால் உலைந்து.

# காமராஜர்

பாமரர் பெருந்தலைவர்—நம்
பாரத நாட்டின் நற்பணிகள்
சேரூற உழைக்கும்—ஒரு
சிந்தனை மிக்குள சமதர்மர்
காம ராஜர்தமிழ் நாட்டின்
காடு மேடுகள் நடந்தறிந்தே
தாமின் புறுவதுல கின்புறத்
தந்த பெருந்தகையார் தமிழ்நாட்டார்.

பட்டி தொட்டிகள் நன்கறிய—எங்கும்
பரந்த பெயரினைப் பெற்றிருப்பார்
கட்டிய வேட்டியும் சட்டையுமாய்—ஒரு
காவி யணியாத் துறவியைப்போல்
கிட்டியமட்டும் எளிமையுடன்—நற்
கீர்த்தி வகையிற்பெருமை யுடன்விருது
பட்டியிற் றோன்றிய கருமவீரர்
பாரதம் அறிந்த பெருந்தலைவர்.

# அண்ணா

சன்னித் தமிழன்னை கண்ணீர் நெகிழ்ந்தயரத்
தென்னவர் தனித்தலைவா சீராளா—விண்ணடைந்தாய்
அண்ணா தமிழ்முதல்வா அன்புருவாய் இன்சொல்லாய்
என்றுன் உனைக்காண்போம் இங்கு?

உள்ளத் தெளிவுரைக்கும் புன்னகையும் உன்னதமாம்
கள்ளமிலாச் சொல்லழகும் கம்பீரப் பேச்சழகும்
எள்ளளவும் அண்ணன்போல் புண்படுத்தா இங்கிதமும்
உள்ளார் இனியார் உரை?

# இலங்கையர்கோன்

சந்தப் பதவுரைகள் சாத்திரத்துப் பூசல்கள்
முந்தப் பழம்புலவர் பண்டிதர்கள் கலகமிட
மூலப் பொருளாகித் தாழ்ந்துவிட்ட
காலக் கேடதனைத் தமிழ்மொழிதான் காணுமல்
தமிழகத்தும் ஈழத்தும் தலையெடுத்த கலையழகர்
பலராவார் அவருள்ளே இரண்டொருவர் தலையாவார்
மறுமலர்ச்சி யுகந்தனிலே தனிமலர்ச்சித் தமிழ்செய்த
தென்னுட்டுப் புதுமைப் பித்தனைப் போல்
பொழில்மலர்சூழ் ஈழத்துப் புதுத்தமிழின் தலைமகனும்
எழில் மலராய் வெள்ளிப் பாதசரமும்
இன்னும் பலப்பலவாம் துணிவான நற்கருத்தும்
சொல்லிச் சிங்க வேறெனத் திரிந்த
ஈழத்துப் புதுமைப் பித்தன் இலங்கையர்கோன்
காலத்தை நிறுத்தி வைத்த கருத்தாளன்,
சாலச் சிறந்த பலதமிழ் நாடகங்கள்
தனிச்சிறப்பால் மிகப்பெரிய மூதற் காதல்
போலப் பலகதைகள் தந்ததொரு கதைச்சிற்பி
காலும் தெரிந்தளித்த நல்லகலை விநோதன்
காலம் மறைத்தாலும் கதைகள் மறையாமல்
நீல விசும்பும் நித்தில மணிக்கடலும்
கோலத் தமிழ் மொழியாம் தெய்விகமும்
குவலயத்தே உள்ளவரை இலங்கையர் கோன்
புகழ்மொழியும் இருந்துவரும் இதுசத்தியமே!

# நன்றியுரை

நா. பா வின் சிறுகதைத் தொகுதியையும், கட்டுரைத் தொகுதியையும் தமிழ்கூறும் நல்லுலகத்தின் முன் படைத்த சூட்டோடு, இப்போது மணிவண்ணனின் கவிதைத் தொகுதியைத் தருகிறோம். மணிவண்ணன் இன்றல்ல, நேற்றல்ல அவர் எழுதத் தொடங்கிய நாள் முதலே கவிதைக் கலையில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் என்பதை அவர் எழுத்துக்களைத் தொடர்ந்து சுவைப்போருக்குத் தெரியும். அவர் அவ்வப்போது பல்வேறு இதழ்களில் மணம்பெற வைத்த கவிதைகளே இன்று உங்கள் கரங்களில் செவிநுகர் கனிகளின் திரட்சியாகத் திகழ்கின்றன.

தமிழகத்திற்கு இதுவரை பிரபல நாவலாசிரியராகவும், கதாசிரியராகவும், கட்டுரையாளராகவும் அறிமுகமாகிப் புகழ் பெற்ற ஆசிரியர் அவர்கள், 'மணிவண்ணன்' என்ற முத்திரையுடன், பாரதிக்குப் பின் வந்த கவிஞர்களுள் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெறும் கவிஞராகவும் இக்கவிதைத் தொகுப்பின் வழியே தோன்றவிருக்கிறார் என்பதை மகிழ்ச்சியுடன் கூறிக் கொள்ளுகிறோம். அவர்தம் கவிதைகள் இன்று கவிதையுலகிற்கு முறையாகக் கிடைத்த தனம் போன்றவை. மணிவண்ணன் பழந்தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடும், மறுமலர்ச்சித் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியில் பெரிதும் நம்பிக்கையும் மிக்கவர். அதுமட்டுமன்று, அகன்றளாவிடும் கவித்வக் கண்ணோட்டத்தை இயற்கை வரமெனப் பெற்றவர். அவரது புதினங்களில் வரும் அழகிய உரையாடல்கள் பழகிய கவிதைபோல் இனிக்கும் வனப்பினைக் கொண்டவையென்று பலரும் மகிழ்வுடன் பாராட்டுகின்றனர்.

'தமிழகத்தில் இன்று கவிஞர்கள் நிறைய இருக்கிறார்கள்; எனினும் கவிதை வறட்சி இருக்கிறது; கவிதை வளம் காணவில்லை' என்றெல்லாம் கூறப்படும் இந்நாளில், 'மணிவண்ணன் கவிதைகள்' கவிதை வளத்திற்கு மென்மேலும் உரம் சேர்க்கும் உரமாக அமையும் என்ற நம்பிக்கையுடன் இக்கவிதைத் தொகுப்பினை உங்கள் முன் வைக்கின்றோம்.

கவிதைகளை ஒன்றுய்த் தொகுத்து, பகுத்து, பிரித்து, இன்று வெளியிடும் நல்வாய்ப்பு எமக்கு வாய்த்தமைக்கு ஆசிரியரின் நேயம் நிறைந்த ஒத்துழைப்பே காரணமாகும்.

மணிவண்ணனின் கவிதைகளை நீண்ட நெடுநாட்களாக எதிர்பார்த்திருந்தோருக்கு இக்கவிதைத் தொகுப்பினை வெளியிடுவதன் மூலம் மனமகிழும் வாய்ப்பினைத் தருகிறோம். வணக்கம். நன்றிகள் எண்ணில.

மு. வேலாயுதம்
நவபாரதி பிரசுரம்

# இந்நூலாசிரியரின் பிற நூல்கள்...

நாவல்கள் :

| | | |
|---|---|---|
| குறிஞ்சிமலர் | ரூ. 5 | 00 |
| பொன்விலங்கு | 10 | 00 |
| பட்டுப்பூச்சி | 4 | 00 |
| நெற்றிக்கண் | 5 | 00 |
| கபாடபுரம் | 4 | 00 |
| மலைச்சிகரம் | 1 | 50 |
| மணிபல்லவம் | 15 | 00 |
| பாண்டிமாதேவி | 12 | 00 |
| பிறந்த மண் | 5 | 00 |
| வெற்றி முழக்கம் | 10 | 00 |
| அறத்தின் குரல் | 10 | 00 |
| மனக்கண் | 3 | 00 |
| கோபுர தீபம் | 5 | 00 |
| நெஞ்சக் கனல் | 4 | 00 |
| வஞ்சிமாநகரம் | 3 | 00 |
| சமுதாய வீதி | 5 | 75 |
| ஆத்மாவின் ராகங்கள் | 6 | 00 |

சிறுகதைத் தொகுதிகள் :

| | | |
|---|---|---|
| வலம்புரிச் சங்கு | 3 | 00 |
| மூவரை வென்றான் | 2 | 00 |
| நெருப்புக் கனிகள் | 3 | 00 |
| மங்கியதோர் நிலவினிலே | 3 | 00 |
| புதிய பாலம் | 2 | 00 |
| வேனில் மலர்கள் | 3 | 00 |
| தகடூர் யாத்திரை | 4 | 00 |
| இராஜகோபுரம் | 4 | 00 |
| காலத்துக்கு வணக்கம் | 3 | 00 |
| கண்ணன் கதைகள் | 3 | 00 |
| கங்கை இன்னும் வற்றிவிடவில்லை | 4 | 00 |
| மகாத்மாவைத் தேடி | 3 | 00 |
| தேவதைகளும் சொற்களும் | 3 | 00 |

கவிதை—கட்டுரை—ஆராய்ச்சி நூல்கள் :

| | | |
|---|---|---|
| சொல்லின் செல்வம் | 5 | 00 |
| மொழியின் வழியே | 3 | 00 |
| கவிதைக் கலை | 4 | 00 |
| நானூற்றில் நல்ல காட்சிகள் | 1 | 00 |
| புதிய பார்வை | 3 | 00 |
| மணிவண்ணன் கவிதைகள் | 3 | 00 |
| கடற்கரை நினைவுகள் | | (அச்சில்) |
| சிந்தனை மேடை | | (அச்சில்) |



நா. பார்த்தசாரதி

'நா. பா.' என்றும் 'மணிவண்ணன்' என்றும் தமிழ் வாசகர் குழாம் அன்புடன் அழைக்கும் திரு. நா. பார்த்தசாரதி 18-12-1932-ல் பிறந்தார். ஏராளமான நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகள், கவிதை, இலக்கிய விமர்சனக் கட்டுரைகளுக்கு ஆசிரியரான திரு. நா. பார்த்தசாரதி அவருக்கே உரித்தான தூய எளிய நடையினாலும் சீரிய கருத்துக்களினாலும் பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் மனத்தைக் கவர்ந்திருக்கிறார். அவருடைய நாவல்களில் முக்கியமானவை 'பாண்டிமாதேவி', 'குறிஞ்சிமலர்', 'மணிபல்லவம்', 'பொன்விலங்கு': 'கோபுர தீபம்', 'பட்டுப்பூச்சி', 'நெற்றிக்கண்'. 'கபாடபுரம்', 'நெஞ்சக்கனல்', 'சமுதாயவீதி'. இதில் முதல் நான்கு நாவல்களும் 'கல்கி' வாரப் பத்திரிகையில் தொடர் கதைகளாக வெளிவந்து கணக்கற்ற ரசிகர்களின் பாராட்டைப் பெற்றவை. அவருடைய சிறுகதைத் தொகுதிகளில் முக்கியமானவை: 'மூவரை வென்றான்'. 'காலத்துக்கு வணக்கம்', 'ராஜகோபுரம்', 'தகடூர் யாத்திரை', 'மங்கியதோர் நிலவினிலே' 'நெருப்புக் கனிகள்', 'வேனில் மலர்கள்', 'புதிய பாலம்', 'தூங்கும் நினைவுகள்', 'தேவதைகளும் சொற்களும்' முதலியன. கவிதைத்துறையில் பெரும் ஈடுபாடுள்ள திரு. பார்த்தசாரதி 'கவிதைக் கலை' என்று ஒரு புத்தகமும் எழுதியிருக்கிறார். தொல்காப்பியத்தின் பல்வேறு உரைகளைப் பற்றி நீண்டகால ஆராய்ச்சி செய்திருக்கிறார். இத்துறையில் அவருடைய மற்ற நூல்களாவன: 'சொல்லின் செல்வம்', 'மொழியின் வழியே'.

திரு. பார்த்தசாரதி மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் 'பண்டிதர்' (பாண்டித்துரைத் தேவர் பரிசுடன்) பட்டமும் சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'வித்வான்' பட்டமும் பெற்றுள்ளார். 'கல்கி' வாரப் பத்திரிகையில் நான்கு வருடங்கள் முக்கிய பதவி வகித்த திரு. பார்த்தசாரதி 1965-ம் ஆண்டில் 'தீபம்' இலக்கிய மாத இதழை ஸ்தாபித்தார். மூன்று வருட காலத்துக்குள் 'தீபம்' இந்தியாவிலும் கடல் கடந்த பிரதேசங்களிலும் தமிழ் வாசகப் பெருமக்களின் பெருமதிப்பைப் பெற்றிருக்கிறது. பொதுக்கூட்டங்களிலும், விவாதமேடைகளிலும், பட்டிமன்றங்களிலும் இலக்கியப் பேரவைகளிலும் அவர் நிகழ்த்தும் உரைகள் கருத்தாழமும், தெளிவும், சொல் நயமும் வாதத் திறமையும் சிறப்பம்சங்களாகக் கொண்டவை. திரு. பார்த்தசாரதி ஏராளமான சக எழுத்தாளர்களுக்கு உற்ற நண்பரும் துணைவரும் ஆவார்.

WRAPPER PRINTED AT DEEPAM ACHAGAM MADRAS-2